உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ௧௯.] ரௌத்திரி-ஸு கார்த்திகை-மீ [பகுதி ௧.

Vol. XIX. November—December-1920. No. 1.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.

வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] ரௌத்திரி-ஆடு கார்த்திகை-மீ [பகுதி க.
Vol. XIX. November—December-1920. No. 1.

## சிறப்புப்பாயிரம்.



சிறப்புப்பாயிரமாவது நூற்குரிய பாயிரவகைகள் இரண்டனுள் ன்று. அஃது "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை—நூற்பெயர் ப்பே நுதலிய பொருளே—கேட்போர் பயனொ டாயெண் பொருளும்- ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே" என்புழிக் கூறிய எட்டுவிடயங் பும் இனிதுணர்த்துவது. இப்பாயிரம் தன்னாற் கூறப்படும் நூல் ற்கே உரிமையாதல்பற்றிச் சிறப்புப்பாயிரம் எனப்பட்டது. சிறப்பு- சேடம். பாயிரம்—வாசகம், வரலாறு. இதனை வடநூலார் உபோற் தம் என்பர். சிலர் சார்த்துகவி, துதிகவிமுதலிய பெயர்களுங் கூறு . சார்த்துகவி—நூலாசிரியன் பெயர் முதலியவைகளிலே சார்த்திச் சால்லப்படுவது. சார்த்துவரி என்பதற்குப் பாட்டுடைத்தலைவன் யர் முதலியவற்றொடும் சார்த்திச் சொல்லப்படும் பாட்டு என்று சிலப் திகாரவுரைகாரர் கூறுவர்.

ஆக்கியோன்—நூல்செய்தவன். நூல்செய்தவருள்ளே சிலர் பாயிரக் களாலும், வேறு வாக்கியங்களாலும் பலவாறு புகழ்ந்துரைக்கப்படு ற்றனர். வித்துவான், மஹாவித்துவான், புலவர், பண்டிதர், ஆசிரி , தமிழாசிரியர், போதகாசிரியர், பிரசாரகர், நூலாசிரியர் முதலிய ப்புப் பெயர்களாலும் புகழ்ந்து கூறப்படுகின்றனர். சிலர் தந்நூற் கடனகாரர் தாமேயாயும் விலாசபக்கத்திலே மகா-ள-ள-ஸ்ரீ ஸ்ரீமத், மான், அவர்கள் முதலிய பூச்சியவாக்கியங்களையும், ஆசிரியர், புலவர், டிதர் முதலிய விசேடநாமங்களையும் தாமே இட்டுக்கொள்ளுகின்

றனர். பல நூலுரைகளை இயற்றினவரும், பரிசோதித்து அச்சிட்ட
வருமாய் விளங்கியும் சிலர் யாதொரு விசேடணங்களுமின்றித் தமது
நாமங்களை வாளாங்கு வரைந்துவிடுகின்றனர். இவர் செயல்களுள்ளே
தகவுடையது யாது?

நூற்பெயர்—நூலுக்கு இட்டுக்கொள்ளும் பெயர். ஒரு நூலுக்கு
பெயர் கூறுமிடத்து அந்நூலிற் கூறப்படும் பொருளின் தலைமைபற்றி
யாவது பன்மைபற்றியாவது ஒரு பெயர்ப் பொதுச்சொல்லாய் அ
பெயர் வரல்வேண்டும். நூற்பெயர்போலவே வாக்கிய வடிவமாக எழுத
படும் விடயங்களின்பெயர்களும் வரல்வேண்டும். நூற்பாகுபாடுகளி
பெயர்களும் வரல்வேண்டும். பெயர் பொதுமொழியினின்றுந் தவ
லாகாது. நன்னூலாரும் "பொதுமொழிதொடரின்" என்பர். சுரு
கமும், தொகைநிலையும், சொல்லின் அடிப்பாடும் பெற்றுவரும் பெய
களே அறிஞர்க்கு அழகு பயப்பனவாகும். கந்தபுராணம், இராமாயண
முதலிய காவியங்களிலுள்ள படலப்பெயர்களை ஆராய்வார்க்குப் பெ
களின் பேரழகு நன்கு புலப்படும். நட்புக்கோட்படலம், கோலங்கா
படலம் முதலிய பெயர்களை ஆராய்க. பன்மொழித்தொடரால் வ
நீண்டிசைக்கும் பெயர்களும், பக்கிசைக்கும் பெயர்களும், அடிப்பா
பெயர்களும் அறிஞர்க்கு அழகுபயப்பனவல்ல. "உருவம் முத
நான்கிற்குமுள்ள நித்தாநித்தங்களின் விவரணம்" "பிரதிகண்டனத்தி
மேற்கண்டனம்" "ஆகுபெயரன்மொழித்தொகையாராய்ச்சி" முதலி
பெயர்களை ஆராய்க. சிலர் தமது நூற்குத் தாமாகப் பெயரிடல் அறியா
பிறர் நூற் பெயர்களைப் படியெடுத்துச் சிறிதுமாற்றித் தமது நூற
இட்டுக்கொள்வர். வாழ்த்கலங்காரம், குமாரநாயகாலங்காரம், 
பெருமானலங்காரம், தோத்திரமஞ்சரி, கதாமஞ்சரி, துதிமஞ்சரி, வ
களை வச்சிரதண்டம், வழூக்களை வச்சிரகுடாரம், இலக்கணதீபம் முத
பெயர்களை ஆராய்க. முதனூல், கருத்தன் முதலியவற்றால் வ
பெயர் இவற்றோடு மாறுபடுவதன்று.

யாப்பு—வாக்கியங்களைத் தொடுத்து நூல்களை ஆக்குதல். அ
தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு என நா
வகைப்படும். இவற்றுள்ளே மொழிபெயர்ப்பு என்னும் யாப்பின
இப்பொழுது நூலியற்றுவோருட் சிலர் பெரிதும் வேறுபாடுறச்செ

சங்கத மொழியினின்று தமிழ்மொழியிற் பெயர்த்த நூல்களுள்ளே சில வற்றிலே சங்கத நடையும், தமழிற் பயிலாத சங்கதச்சொற்களும் விரவி வருகின்றன. இதோபதேசம், மானவதருமநூல், உலோகசுகுணக் கண்ணுடி முதலியன நோக்கி ஆராய்க. அங்கிலமொழியினின்று தமிழ் மொழியிற் பெயர்த்தவைகளுள்ளும் சிலவற்றிலே அங்ஙனம் வருகின் றது. கந்தபுராணம், கம்பராமாயணம் முதலியவைகளிலே மூலமா யிருந்த சங்கதமொழிநடையையும், தமிழ்மொழியிலே வாராத சங்கதச் சொற்களையுங் காண்ட லரிது.

நுதலியபொருள்—நூலியற்றினோர் சொல்லக் கருதியுரைத்த பொருள். இது பாயிரகாரராலே தவிராது கூறப்படுவது. இதனைக் கூறாது வேறுபொருள்கூறிய பாயிரகாரருமுளர்.

ஆக்கியோன் பெயர் முதலிய எட்டுடனே காலம், களம், காரணம் என்னும் மூன்றையுஞ் சேர்த்து மொழிவாருமுளர். பண்டைக்கால நூலுரைகாரருள்ளே பலர் அறம், பொருள், இன்பம், வீடு என்பவை களைத் திறம்படக் கூறல்வேண்டும் என்பதனையன்றிக் காலங் கூறல் வேண்டும் என்பதனை மேலதாகக் கொண்டிலர். சிலர் காலங்களையுங் கூறினர். கந்தபுராணகாலம் "ஏதமறு சகாத்தமெழுநூற்றேழின்மேல்" என்பர். இராமாயணகாலம் "எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேல்" என்பர். சங்கற்பநிராகரணகாலம் "ஏழஞ் சிறுநூறெடுத்தவாயிரம்—வாழு நற்சகனம்" என்பர். செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழின்காலம் "இலகுசகம்ரெட்டுநூற்றுநாற்பத்தேழு" என்பர். சிலர் நூலரங்கேற் றியபோது அவ்வரங்கத் தலைவனுயிருந்த அதிபதி காலங்கொண்டு காலம் இது என்று உய்த்துணரவைப்பர். அப்படி வைக்கப்பட்டவை வில்லி பாரதம் முதலியன. காலங்கூறாத நூலுரைகாரர்களும், தக்க நூலுரை களும் இகழ்ந்து விலக்கப்படவில்லை. நற்றமிழ்வல்லுநராலே நூலுரை காரரும் புகழ்ந்து போற்றப்படுகின்றனர். நூலுரைகளும் பாராட்டிப் படித்துப் பயன்கொள்ளப்படுகின்றன.

இங்ஙனமாகவும், அங்கிலங் கற்கும் நமது தமிழ் மாணவகர் சிலர், சில தமிழ்நூல்களிற் காலங் கூறப்படவில்லை என்று குறைகூறிப் பிற வழியாலே காலங்களை ஆராய்ந்து வாதிக்கின்றனர். அந்நூல்களிற் கூறப் படும் அறம், பொருள், இன்பம், வீடு என்பவைகளை ஆராய்ந்தறிதலிலே

பெரும்பாலுஞ் செல்வதில்லை. திருவாதவூரர்காலத்திலே பெருவாதம் நிகழ்ந்தது. அவர்காலம் மற்றைய சமயகுரவர்க்கு முன் என்று சிலரும், பின் என்று சிலரும் வாதிப்பர். அவரிடத்திலே அன்புள்ளார்க்கு முன்னாயினென்! பின்னாயின் என்! காலநிச்சயத்திற்கு ஏதுக்களாகச் சிலராற் கொள்ளப்படும் சொற்பிரயோகங்களும், அரசநாமங்களும், பிறவும் மறுத்துரையாடவும் படுகின்றன.

இப்பாயிரங் கூறுதற்கு அதிகாரிகள் என்று இப்பொழுது பலருங் கொள்ளப்படுகின்றனர். தக்க புலமையிருந்தும் நூல்களை முற்ற நோக்கிக் குற்றங்களுளவாயின் மறுத்துரையாடாது புனைந்துரையாடிக் கவிகூறும் புலவர்களுங் கொள்ளப்படுகின்றனர். தமிழ்மொழியை நன்கு கல்லாது பிறமொழியையே நன்கு கற்ற அறிஞருங் கொள்ளப்படுகின்றனர். புத்தகம் நன்கு விலையாதற்குக் காரணர் என்பாருங் கொள்ளப்படுகின்றனர். இவரெல்லாம் இப்பாயிரம் கூறற்கு அதிகாரிகளல்லர். இப்பாயிரங் கூறற்கு அதிகாரிகள் நால்வர்.

க. ஆக்கியோராகிய நூலாசிரியர்க்குப் பலநூல்களையுங் கற்பித்த உபாத்தியாயர்.

உ. நூலாசிரியரிடத்தே பல நூல்களையும் படித்துக்கொண்ட மாணவகர்.

௩. நூலாசிரியரோடு கூடி ஒருசாலையிற்சென்று பல நூல்களுங் கற்று அவரோடு நன்கு பயின்றவர்.

௪. நூலாசிரியரியற்றிய நூல்களிலுள்ள சொற்பிரயோகங்களையும், பொருள்களையும், பிறவற்றையும் பலமுறை நோக்கி நல்லுரை கூறிய உரைகாரர்.

இந்த நால்வருமே நூலாசிரியருடைய கல்வியின் பெருமை சிறுமைகளையும் நூல்களின் குணதோஷங்களையும் நன்கறிய வல்லவராவர். இவர் கூறும் பாயிரமும் நம்பிக்கைகொள்ளற்பாலதாகும். "தன்னாசிரியன் றன்னொடு கற்றோன் றன்மா ணாக்கன் றகுமுறை காரனென்—றின்னோர் பாயிர மியம்புதல் கடனே" என்ற நன்னூற் சூத்திரத்தைப் பாயிரம் கொடுக்கல் வாங்கல் செய்வோர் பார்ப்பது நன்று. நூலாசிரியர் தாமே பாயிரங் கூறும் வழக்கம் சிறுபான்மை உண்டு. சூடாமணி நிகண்டு, பிரபோதசந்திரோதயம் முதலியவைகளை நோக்குக.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

# பண்டைத் தமிழ்மாதரும் ஆபரண மணிதலும்.

---

சென்ற செப்டம்பர்மீ 5வ நடைபெற்ற மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வருஷக்கூட்டத்தில் ஸ்ரீமத்-ரா. இராகவையங்காரவர்கள் 'தமிழாராய்ச்சி' என்ற விஷயமேற்கொண்டு பேசியதருணத்தில், பண்டைக்காலத்துத் தமிழ்மக்க[ள்] ஆபரணாதிகளால் ஆடம்பரவேடங்கொள்ளாதிருத்தலே நாகரிகமென்று கருதினரென்ற கொள்கையை வெளியிட்டுத் தொன்னூல்களிலிருந்து மேற்கோள்காட்டி வற்புறுத்தியதாகச் 'செந்தமிழ்'ப்பத்திரிகையில் கூறியிருக்கின்றது (செந்தமிழ்; தொகுதி 18. பகுதி 10. பக்கம்ருசுரு). ஐயங்காரவர்கள் தொன்னூல்தேர்ச்சி மிகவேபெற்றபேரிசைப் புலவராகையால், தமிழ்நாட்டின் முன்காலத்து நடத்தையைப்பற்றி அவர்கள்விளம்புங் கூற்று என்போலியரா லெளிதில் மறுக்கத்தக்கதன்று. என்னே? "ஈயாடுவதோ கருடற்கெதிரே, இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ?" ஆயினும், இழைபூணல் தற்காலத்து மக்களின் தவறொழுக்கமென்றும், முன்காலத்தார் அணிபறித் தழகுசெய்யு மியல்பினரென்றும் தமிழிலக்கியத்தால் தாபிக்கமுடியாதென்ற ஐயம் என்மனத் தெழுந்தது பற்றி ஈண்டுச் சிலவரிக ளெழுதத் துணிவுற்றேன்.

தமிழில் தொன்றுதொட்டுப் 'பெண்' எனும்பொருளை அன்மொழித்தொகையாலுணர்த்திவரும் பன்மொழிகளுள் 'ஆயிழை', 'ஏந்திழை', 'சேயிழை' 'நேரிழை' முதலியன சிலவாம். உதாரணமாக இங்குச் சிலநூற் பிரயோகங்கள் காட்டப்பட்டுள:—

"ஆயிழையொடின்புறு மறத்தைமுதலாற்றும்" கந்தபுராணம்.

"இருண்மையிருண்கணிலங்கிழையின்றுட்கரியளோ"

8-ம் பரிபாடல்.

"நீருரைசெய்நீர்மையில் சூளென்றி நேரிழாய்" அ-ம் பரிபாடல் 73.

"நேசமும்வைத்தனைபோ நேரிழையாய் நேரிழையீர் சீசி இவையுஞ் சிலவோ." திருவாசகம் 7. 6.

"நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர்"

ஆண்டாள் திருப்பாவை.

"திங்கள் திருமுகத்துச்சேயிழையார் சென்றிறைஞ்சி"

ஆண்டாள்திருப்பாவை.

"செங்கனிவாயிதழுந்துடிப்பச்சேயிழையீர்சிவலோகம்பாடி"

திருவாசகம் கூ-டுரு.

அன்றியும், மகளிரை "அணியிழை நல்லார்" என்று கூ-ம் பரிபாடலிற் கூறியிருப்பதும், அதே பரிபாடலில் வள்ளியை 'ஒள்ளிழை' என்ற ஆகுபெயராலுணர்த்தியதும் கவனிக்கத்தக்கது. மேற்கூறிய நூற் பிரயோகங்களால், தமிழ்ப்பெண்களின் பண்டைக்கால முக்கிய இலக்கணம் ஆபரணங்களால் தங்கள் தேகத்தை யலங்கரித்துக்கொள்ளுதலென்றும், அவ்வழக்கம்பற்றி இலக்கணையாக, ஆபரணத்தைக்குறிக்குஞ் சொல்லாகிய "இழை" என்ற பதத்தைத் தனியாகவும் அடைமொழி சேர்த்தும் பெண்மக்களையுணர்த்த முன்னோர்கள் பிரயோகித்துவந்தன ரென்றும் தெள்ளிதிற் காணக்கிடக்கின்றது. அழகு பெண்டிரின் உரிமையாகக்கருதி, காரிகை, சுந்தரிபோன்ற மொழிகளாற் பெண்மக்களையுணர்த்திய முற்காலத்தறிஞர்கள், அணிகலன்பலபூண்டு அழகுக்கழகுசெய்யும் வழக்கம் பெண்டிரிடந் தொன்முறைவிளங்குதல்கண்டு, ஒள்ளிழை, ஏந்திழை போன்ற பன்மொழிகளாற் பெண்பாலர்க்கு விசேடணப்பெயர் கற்பித்தார்கள். இவ்வழக்கால் தமிழ்நாட்டுப் பெண்மக்கள் பண்டைக்காலத்திற் கலனணிவதி லார்த்திப்பெருக்கு அடைந்திருந்தார்களென்று ஐயமறக் கூறலாம்.

முன்காலத்தில் தமிழ்மாதர் உச்சிமுத லுள்ளங்கால்வரை ஒவ்வோருறுப்பிலும் பலவாபரணங்க ளணிந்துவந்தார்களென்பது தொன்னூல்களால் நன்குவிளங்கும். சான்றாகப் பின்வருவனவற்றை ஆய்ந்துநோக்குக. ஆறும் பரிபாடலில், வையைப்புனலாடும் மகளிரைக்கூறுமிடத்து.

தொடிதோள்செறிப்பத்தோள்வளையியங்கக்
கொடிசோரத்திருக்கோவைகாழ்கொளத்
தொகுகதிர்முத்துத்தொடைகலிழ்புமழுக

என்று ஆசிரியர் நல்லந்துவனார் வர்ணித்திருக்கின்றார். ஏழாம் பரிபாடலில்,

துனைந்தாடுவாராய்கோதைய்
ரலர்தண்டாரவர்காதிற்
றளிர்செரீஇக்கண்ணிபறித்துக்
கைவளையாழிதொய்யகம்புனைதுகின்
மேகலைகாஞ்சிவாகுவலய
மெல்லாங்கவருமியல்பிற்றாய்

என்று மையோடக்கோவனாரும் பாடியிருக்கின்றார். ஆண்டாளும் திருப்பாவையில்,

சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்

என் றருளிக்கூறுவது இவண் கவனிக்கத்தக்கது. சிலப்பதிகாரம் கடலாடுகாதையில்,

அலத்தக மூட்டிய வஞ்செஞ் சீரடி
நலத்தகு மெல்விர னல்லணி செறீஇப்
பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை
யரியகங் காலுக் கமைவுற வணிந்து
குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்துப்
பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்
நிறங்கிளர் பூந்துகி னீர்மையி னுடீஇக்
காமர் கண்டிகை தன்னொடு பின்னிய
தூமணித் தோள்வளை தோளுக் கணிந்து
மத்தக மணியொடு வயிரங் கட்டிய
சித்திரச் சூடகஞ் செம்பொற் கைவளை
பரியகம் வால்வளை பவழப் பல்வளை
யரிமயிர் முன்கைக் கமைவுற வணிந்து
வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரங்

கேழ்கிளர் செங்கேழ் கிளர்மணி மோதிரம்
வாங்குவில் வயிரத்து மரகதத் தாள்செறி
காந்தண் மெல்விரல் காப்ப வணிந்து
சங்கிலி நுண்டொடர் பூண்ஞாண் புனைவினை
யங்கழுத் தகவயி னாரமோ டணிந்து
கயிற்கடை யொழுகிய காமர் தூமணி
செயத்தகு கோவையிற் சிறுபுற மறைத்தாங்
கிந்திர நீலத் திடையிடை திரண்ட
சந்திர பாணித் தகைபெறு கடிப்பிணை
யங்கா தகவயி னழகுற வணிந்து
தெய்வ வுத்தியொடு செழுநீர் வலம்புரி
தொய்பகம் புல்லகந் தொடர்ந்த தலைக்கணி
மையீ ரோதிக்கு மாண்புற வணிந்து

என்று இளங்கோவடிகள் அக்காலத்துப் பெண்மக்கள் பாதாதிகேசம் வரையிற் பூணு மாபரணங்களை விளக்கிக் கூறியுள்ளார். அடியார்க்கு நல்லாருரையிலும் மூலத்தைத் தழுவியும் விரித்தும் ஏனையோர் கூற்றுக்களும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இவற்றை யெல்லாம் ஆய்ந்த பிறகு, முன்காலத்துத் தமிழ்ப்பெண்டிர் பல்வகைக்கலன்கள் அங்கமோவ்வொன்றிலும் அணிந்து விளங்கினரென்று துணிதல் சற்றுந் தவறாகாது.

திருவனந்தபுரம்.

கே. ஜி. சேஷையர்.

---

ஸ்ரீ:

# ஆழ்வார்பிள்ளைத்தமிழ்.

[ஆழ்வார் பிள்ளைத் தமிழ்:—இந்நூலை இயற்றியவரது பெயர் காலம் முதலியன புலப்படவில்லை. இந்நூற் செய்யுட்களிற் சில எனக்குக் கிடைத்தன. அவை பத்திச்சுவையைப் பெருக்குவனவாகவும், இலக்கியங்கற்கப்புகுவார்க்குப் பெரிதும் பயன்படத்தக்கனவாகவும், செய்யுள் செய்யுந்திறத்தை யுண்டாக்குவனவாகவும், இனிய நடையில் இயற்றப் பட்டனவாகவும் விளங்குகின்றன. ஒவ்வொரு செய்யுளும் அழகர் பிள்ளைத்தமிழேபோல வெவ்வேறு சந்தச்சுவைபெறப் பாடப்பட்டுள்ளது. இச்செய்யுட்கள் எனக்குக் கிடைத்தபடியே பதிக்கப்பெற்றுள்ளன. இதிற் காணப்படும் பிழைகளைத் திருத்திக்கொள்ளும்படி அறிஞர்களை வேண்டுகிறேன். இந்நூலின் எஞ்சியபாகமுமுள்ள ஏட்டுச்சுவடிகள் வைத்திருப்போர் அவற்றைக் கொடுத்துதவுவார்களாயின் இயன்றவரை திருத்திச் செந்தமிழிற் புத்தகமாக வெளியிடற் குபகாரமாகும்.]

## பாயிரம்.

### கட்டளைக்கலித்துறை.

ஆயுந் தமிழ்த்தென் குருகூரி லேவந் தவதரியா
நாயும் பரகதி பெற்றதைக் கேளு நமக்குவந்து
போயும் பிறருற வல்லநெஞ் சேதினம் போற்றுதும்வா
தாயும் பிதாவுநம் மாழ்வார் திருவடித் தாமரையே. (க)

தேடிய செல்வமெல் லாந்திரு வாய்மொழி தேர்ந்துவழி
கூடிய வூர்களெல் லாங்குரு கூர்சொற் கொழித்தெடுத்துப்
பாடிய நாமமெல் லாமகிழ் மாறன் பரிவுடன்சென்
றாடிய தீர்த்தங்க ளெல்லாந் திருச்சங் கணித்துறையே. (உ)

### வேறு.

தேனரு மகிழ்த் தொடையலு மௌலியுந்
திருக்கிளர் குழைக்காதுங்
கானரு மலர்த் திருமுகச் சோதியுங்
கமிரவத் துவர்வாயு

மோனமாகிய வடிவமு மார்பமு
முத்திரைத் திருக்கையு
ஞானதேசிகன் சரணதா மரையுமென்
னயனம்விட் டகலாவே. (௩)

பாராத கல்விப் பரந்த பொருளனைத்து
நேராக முன்வந்து நிற்குமே—தோராது
தேவிறு கொண்ட திருமாலே முத்தமிழ்தேர்
நாவீ றனைத்துதித்த நாள். (௪)

என்றுந் திருமாற்கே யாளாவே னெம்பெருமா
னென்று மெனக்கே பிரானவா—னென்றும்
பிறவாத பேராளன் பேரா யிரமு
மறவாது வாழ்த்துகவென் வாய். (௫)

---

காப்பு.

பூபார மன்பதைக ளீடேற வருள்பெரும்
பூதூர் தழைத்துமலியப்
புகழ்தருஞ் சித்திரைத் திருவா திரைப்பரம
புண்ணிய தினத்தவதரித்

தாபாச வறுசமய வேரறுத் தெட்டெழுத்
தாதிமுத லென்றுகூரத்
தாழ்வான் மதித்தருள வாழ்வான தற்சரண
மபிடேகம் வைத்தருளினர்

கோபாலர் தொழுபெரிய பெருமா ளரங்கர்தங்
கோயிற் றிருப்பதிமுதற்
கூறுந் திருப்பதிகள் யாவுந் தழைப்பநங்
குழகனழ கியநம்பிமுன்

போடியஞ் சுருதி வேதந் தனக்கரு
ளிராமாநுசற் றெழுதுமெஞ்
சிறியசொற் புன்கவிதை சிபராங் குசமுனிவர்
திருவுள முவந்தருளவே.

# நூல்.

## காப்புப்பருவம்.

கார்கொண்ட திருமேனிப் பசும்பொருப்பி னடுவே
கதிரெறிக்கு மின்போலக் குடியிருக்கு மொருத்தி
தார்கொண்ட முலையழுந்தித் தழும்பிருந்த மார்பத்
தனிப்பெருநா யகக்கடவுள் சரணமலர் தொழுவாஞ்
சீர்கொண்ட மணிமாடந் திகழ்குருகூர் நங்கை
திருவயிறு வாழவந்த திருக்குழவி மாறன்
பார்கொண்ட மறைநூலின் பயன்கொண்டு தமிழ்நூல்
பாடவல்ல பெருமானைப் பராங்குசனைக் காக்கவே. (க)

### வேறு.

பொதியு மிதழ்வீடு தாமரைக் கோற்றொடி
புணருமணிமார்ப மாயனைத் தாட்சுடர்
புவனி பதினாலு மூடறத் தாக்கிய
பொருளை யவிராழி வால்வளைக் கோட்டொடு
முதிய கதைவேணு வார்சிலைத் தோற்றிய
முகிலை யுறிதேடி வீடுபுக் காய்ச்சியர்
முறுவல் செயவாடு நீள்குடக் கூத்தனை
முருகு வனமாலை நாதனைப் போற்றுதுங்
கதிய மதகூடு பாய்புனற் சேற்றெழு
கமல மணநாறு வாவியைப் போட்டுகள்
கடிய நெடுவாளை பாளையைத் தூக்கிய
கமுக மடல்பீறி யூறுபட் டேற்றிடை
குதிகொண் மதுவாச நீருடைத் தாற்றிடை
குமிழி யெழவோடி மேலிடப் பார்ப்பொடு
குருகு கரையேறி யேதெனப் பார்த்தெழு
குருகை வருகாரி மாறனைக் காக்கவே. (உ)

### வேறு.

நறைகம ழிதழி தாங்கிய வேணிக் காட்டிடை
நதிசெரு கியபுராந்தனை மூரிப் பேய்ப்படை
நடமிட வினிய தாண்டவ மாடிக் காட்டிய
நவையறு கெவுரி காந்தனை மாறித் தூக்கிய
வறைகழ லிசையி லோங்கிய ஞானக் கூத்தனை
யயனிடு சொலவு வேண்டிய சாபக் கோட்டியை
யடுமொரு குழகர் பூந்தொடை மார்பக் கோட்டக
மழகெழ வினிது தோய்ந்தருண் மாதைப் போற்றுது
முறைபடு தயிரை மாந்தி யுபாயப் பேய்ச்சியை
யுறவொடு மருவி வாந்தவ மாகிக் கீழ்ப்பட
வுயிர் நிலை பருகி வாங்கிய மாயச் சூழ்ச்சிய
னுளமறி கருணை யின்றுயிர் சேரக் காத்திடை
மறைதமி ழிசைக ளாம்படி பாரிற் றேற்றிய
வரதனை நறவு தேங்கிய தாமப் போர்க்கழி
மகன்மக னியம மோங்கிய வாசத் தோட்டவிழ்
மகிழ்புனை புயப ராங்குச மாலைக் காக்கவே. (ங)

### வேறு.

மட்டவிழ்ந்த துழாய்த்தொடை மற்புயன்பர மேட்டியை
வைத்தசிந்தை வரோத்தயன் மட்டெழுந்தமி ழூட்டிய
தொட்டளைந்திரு தாட்டொழு சுத்தநங்குரு கூர்ப்புயல்
துப்பிளங்கனி வாய்ச்சிறு சொற்பெறும்படி காப்பவன்
நெட்டிலைந்த பலாச்சுளை நெக்குடைந்தொழு கக்கழை
நித்திலந்தெறி யாப்பய னித்தல்விண்டு களாப்பல
புட்டழுங்கி யெழாச்சில புட்பமண்டப வாய்க்குடி
புக்கிருந்திசை தேக்கிய பொற்குறுங்குடி மூர்த்தியே. (ச)

### வேறு.

பரமவை குந்தையி லொருதனி யொண்சுடர்
வரகுண மங்கையின் மாமணிக் கார்க்கடல்
பாவு புளிங்குடி தொலைவிலி மங்கல
முகில்பதி மந்தகு லோசனக் காட்சியர்

வாமுனி பெண்கொடி தொழுத குளந்தையின்
மாகத மன்பினர் மாநிதிச் சேர்ப்பினர்
வருணன் வணங்கிய மகர நெடுங்குழை
மணிமுது குன்றுறை பேரையைப் போற்றுது

மாவம் வெகுண்டெழு கணபண பந்தியி
னடன விதந்தரு நீள்குடக் கூத்தின
னகிலமு மண்டமு மெவைகளு மிந்த்ரிய
மவைகளு மின்றிய நாளிடைத் தோற்றிய

சுார்புவ னம்புவி கடவுளர் மன்பதை
சுருதி தரும்பெரி யோனைமுற் பூத்தவர்
துளவணி புங்கவர் பரிபுர பங்கய
துணைமுழு குஞ்சட கோபனைக் காக்கவே. (ரு)

வேறு.

இருபுடை யொளிரு மடபடை வெயிலு
மெயிலெழு நிலவும் ப்ரகாசித்தார்ப்பன
வெழுபுவி நடுவு திரிதரும திலை
யெறிசுடர் வெகுண்ட பானுவைக்காட்டுவ

வொருவிழி பரிதி யொருவிழி ஞெகிழி
யொருவிழி யொழுகுங் க்ருபாநிதிப்பாற்கட
லொருபுற முதிய திகிரியி னுருவ
வொருபுற ந்ரசிங்க ரூபனைப்போற்றுதும்

பொருதிரை யுததி மொகுமொகு மொகென
நடுதறி நடுமந்த ராசலப் பூட்டுறு
புழைபடு முரக கயிறிறை சுலவி
யருளமு தியலின்சொ லாயிரத்தாற்றரு

குருபர னியம குணபா னுபய்
குலவரன் வளர்சந்த்ர சோதியைத் தேக்கிய
குளிர்முக வனச மொழுகிய திரும
ணழகெழு தியசெஞ்சொன் மாறனைக்காக்கவே. (சு)

வேறு.

மாடமீட்டிய வீதிநாற்றிசை வாவுதாட்கொடியேழ்
வாசிபூட்டிய தேரையோட்டுவ வானநாட்டவர்வாழ்
வீடுகாட்டுவ போல்விடாப்புகழ் வீசுநூற்குருகூர்
வேதம்வாய்த்தருண் மாறனேத்தரு மேனிகாத்தருள்வா
ராடன்மாக்களி கூரநோக்கிய வாதிமூர்த்தியன்மா
லாழிகோட்டொடு சாபம்வாட்கதை காவலாய்ப்புடைசூழ்
சேடன்மேற்றிரு மாதர்போற்றிய சேயதாட்பெரியோன்
றேசுநாட்டமர் வாசனூற்றிசை சேனைகாப்பவரே. (எ)

வேறு.

விழிக்கட்பொங் கழற்கக்குஞ் சினத்துக்ரந் தெவிட்டிக்கொண்
டெயிறு முறுகிய பாந்தளைக் கீழ்ப்பட
மிதித்துத்தன் க்ருபைக்கட்பங் கயத்தைக்கொண் டிரட்சிக்குந்
தருண வருண பதாம்புயக் கூத்தினர்
தெழித்துச்செந் தயிர்க்கட்டுண் டேரற்கட்டுண் டழக்கற்குங்
குழவி மதமுது தாங்கலைக் காத்தவர்
திருச்சக்ரந் தடக்கைச்சங் கடற்கட்கந் தனிப்பொற்றண்
டரிய வரிசிலை யாந்துதித் தேத்துவஞ்
சுழித்துத்தெண் டிரைத்தத்துந் தடத்திற்பங் கயத்திற்கண்
குமரி வரிவளை யீன்றமுத் தாற்றிருள்
சுருட்டிச்சந் த்ரவட்டத்தின் கதிர்ச்சுற்றுந் திருச்சுற்றுங்
கனக மணியணி காஞ்சனத் தாற்கொடி
கிழித்துப்பைம் புயற்பக்கம் பிளிற்றித்தண் டுளிக்கர்ப்பங்
கமுக மடல்வழி பாய்ந்தெழப் பார்ப்பொடு
கிளிக்குப்பஞ் சரத்திற்செஞ் சிறைப்பொத்தும் பொழிற்சுற்றுங்
குருகை நகர்வரு மேந்தலைக் காக்கவே. (அ)

வேறு.

உரக பணமுடி மேற்றுயி லொளிமணி மேகசி லோச்சய
மொருதிரு நாபியின் மூர்த்திய வுணர்வரி தாய்மறை கூப்பிடு
பரம வியூகமு லாக்கினி பருகிவி டாமல்வி டாய்த்தெதிர்
பரவு திராவிட நூற்பொதி பழமறை யோனிசை காப்பவ

ணரவ கிரீட பணேற்பவ வயிர்பணி யாயிர வாய்த்தழ
லடர்கதி ரோனெளி காட்டிய வணிவின தாசுத சீத்துவன்
வரமலி வானவர் நாட்டிடை மணியணி கோபுர மேற்செலு
மதின்முடி மேல்வட கீழ்த்திசை வளர்கரு டாசல மூர்த்தியே (கூ)

வேறு.

இருநிலஞ் சேரடைவு நெடுவிசும் பூடுருவி
யெழுதருங் கார்கடவுளா
மெவர்களுஞ் சேரவர வொருகிழங் காமொளியை
யிதயபங் கேருகம்விடா
தருகியொன் றுனசுவை பருகிளம் பாலனமு
தமிழ்தரும் பாவினிசைதே
ரொருபெரும் பாவலவன் மகிழலங் காரனரு
ளுறுதிகொண் டாளுவனதேன்
மருவிருஞ் சோலைசெறி குருகைதண் சேறைகடன்
மலைசெழுங் காழியுறையூர்
வரிசைவண் டேர்புருடை திருவழுந் தூர்முதிய
வதரிதண் காவுறைகுவார்
திருவரங் கேசர்திரு மலையலங் காரரணி
திருவுளம் பாடிநகரார்
திருவநந் தேசரழ கியகுறுங் கேசரிவர்
சிறியசெஞ் சேவடிகளே. (க0)

வேறு.

செம்பொற் ப்ரகாசநவ ரத்நரா சுக்கிரண
சித்ரவித் தாரசிகரத்
தெய்விகவி மானகா வர்கடவு ளாகவுஞ்
செய்தொழிற் பகுதியிலவா
மும்பர்க்கு மெட்டாத வெம்பிரா னும்பரொடு
முலகுநிய மித்துலகிடத்
துயிரைநிய மித்தருள வயனைநிய மித்திடமு
னொருவரிவ ரென்னவுளவோ

கம்பக் கடாசயில வுலகமிக் கவிதைதா
வ...............றென்பாற்
காவற்கு மிக்கடவுள் யாவர்க்கு மிக்கடவுள்
கடவுளெவ ருக்குமுதலா
மம்பொற்..............................வையு
மவனலாற் றெய்வமிலையா
லாழ்வாரை யெங்கள்குல வாழ்வாரை நங்குருகை
யாதிநா தன்காக்கவே. (கக)

காப்பு முற்றும்.

செங்கிரை.

ஒருமந் தரப்பரிய சயிலந் திரித்துததி
யுதாங் குழப்பியபிரா
னுலகுண் டடர்த்துவெகு பகிரண்ட முட்டவிடு
மொருபங்க யத்தறிவுநோய்
கருமந் தரித்துமன னகமொன்று பட்டினிய
கருமஞ் சலித்துமறைநூல்
கழறும் பரப்பிரம வொளிகண்டு தத்வநெறி
கரைகண் டருட்பகுதியால்
வருமிந் த்ரியக்கருவி தனைவென் றழுக்குடைய
மலபெந் தனக்குடில்புகா
வழிதண் டமிழ்ச்சுருதி யமுதம் புகட்டியதி
மதுரந் தெவிட்டியெழவே
திருமந் திரக்கவள மிசையுங் குழக்களிறு
செங்கிரை யாடியருளே
திருவாய் மொழிப்புலவ குருகூர் நகர்க்கிறைவ
செங்கிரை யாடியருளே. (க)

வேறு.

பஞ்சரப் பலவித விகாரமோ கிதமுடைப்
பஞ்சபூதிகளின் வகையைப்
பகுதிசெய் தறிவினைப் பிறிதுபடு வித்ததொரு
பரமஞா னக்குழவியே

வெஞ்சமத் துத்தரித் துத்திரி தருந்திகிரி
வித்தில்முத் தித்தசுடராம்
விரிசடைக் கடவுளுந் திசைமுகத் தொருபானும்
வேறுவே றுருவுமடைவே
யஞ்சனக் கிரியுருவி லொன்றாகி யொன்றான
வண்டகோ டிகளின்வெளிமூ
டந்தகா ரத்தைவிட் டந்தர்யா மித்துவத்
தப்புறப் பட்டபரம
செஞ்சுடர்க் கதிர்வயிர வொளிவிடுஞ் சிறுபால
செங்கீரை யாடியருளே
திருவாய் மொழிப்புலவ குருகூர் நகர்க்கிறைவ
செங்கீரை யாடியருளே. (உ)

வேறு.

சலதி தழங்கொலி குலவு கயங்களில் வண்டா னஞ்சேரத்
தமர மிடும்பல படுகர் தொறுஞ்சிறு சங்கோ டும்போகிப்
புலரி வலம்புரி குலவு கயங்களின் மண்டு கந்தாவிப்
பொதியவிழ் பங்கய நறவுக விண்டலர் திண்டா டுந்தாள்பட்
டலசி யுடம்பிடை புதைய விளம்பெடை ஞெண்டோ டும்போகித்
தலவ னுறங்கிய வமளி குலைந்திட வண்டா டுஞ்சோலைத்
திலக வளம்புனை குருகை நெடுந்தகை செங்கோ செங்கீரை
திரிபுவ னம்புகழ் பெருமுது பண்டித செங்கோ செங்கீரை. (ங)

வேறு.

வெங்கட் பணமகுட காகோ தரத்திநெடு
மேகோ தயக்கடவுளால்
வேதப் பரப்பிரம வாதிக் குறுங்குடியுள்
வேரித் துழாய்நிமலர்பாற்
றங்கட்கு மகவாசை பெரிதான காரியார்
தகவுடைய நங்கையுடனே
தருமநெறி யுறவந்து தவமுயலு மதுகண்டு
தனிநா யகப்பொருண்மகிழ்ந்

திங்கட்கு மகவாகி யாமுலகில் வருதுமென்
றுற்பவித் தருளியுலகத்
துயிர்முழுது மீடேற வுபநிடத நான்மறையை
யோரா யிரத்தமிழினாற்
செங்கட் பராபரனை யறிவித்த சிறுகுழவி
செங்கிரை யாடியருளே
திருவாய் மொழிப்புலவ குருகூர் நகர்க்கிறைவ
செங்கிரை யாடியருளே. (ச)

வேறு.

ஆதிநான் முகபுரா ணங்கவி புகாதியி
லகண்டலோ காதிபதிவந்
தருமறைத் தமிழ்புகலு மெனவுரைத் திடுநெறியி
லவதரித் தருளுமளவிற்
போதனா னக்கிரன வாதபோ தயசோதி
புளியிரு ளிலைத்தெழுதலாற்
பொங்குநீர் வடதிசைக் கங்கையிற் கண்டபிற்
றென்றிசைப் புவனத்துநம்
வேதநா தக்கடவுள் வெளிவந்த தெனவென்று
விடைகொண்டு மதுரகவிபால்
விழிதிறந் தெதிர்கண்டு பொய்ந்நின்ற ஞானமென
மெய்ந்நின்ற மொழியருளியோய்
சீதநாண் மலர்மகிழ்த் தொடைமார்ப சடகோப
செங்கிரை யாடியருளே
திருவாய் மொழிப்புலவ குருகூர் நகர்க்கிறைவ
செங்கிரை யாடியருளே. (ரு)

வேறு.

வரிசைவை காசியிற் றிருவிசா கத்தினிய
வாரமொரு புகரில்நெறியாய்
வார்பச்ச மூவைந்தி லணிபெகின யோகத்து
வந்தவ தரித்தளவிலா

வுரிசையா ரமுதுண்டு திருமுலைப் பாலமுத
முண்ணும வண்ணுதபே
ரொளிகண்ட கண்பிரியில் வெளியுண்டு போமென்ன
வுள்ளஞ்சி நயனமூடிப்

பரிசன முராரிதிரு நாமபா ராயணம்
பழுதுபடு மென்னவெருவிப்
பவளவாய் திறவாத ஞானபோ தகமதலை
பரமவா நந்தநியமத்

தெரிசனவ ரோதயக் கவிதையமு தக்குழவி
செங்கீரை யாடியருளே
திருவாய் மொழிப்புலவ குருகூர் நகர்க்கிறைவ
செங்கீரை யாடியருளே. (கூ)

இராமாநுஜையங்கார்,
உதவிப்பத்திராதிபர்.

---

# படிமை.

---

"படிமை" என்ற மொழி, படிமா என்ற பிராக்ரதமொழியின் திரிபென்று என் நண்பர் ஸ்ரீமான் வையாபுரிப்பிள்ளை எழுதியிருக்கிறார். "படிமை" என்ற பதத்தை, படி+மை என்று பிரித்து 'மை' தொழிற் பெயர்விகுதியாகக்கொண்டு அம்மொழிக்குப் "படிப்பு" என்ற பொருள் கோடல் தவறுமோ? மடிமை, மிடிமைபோன்ற மையீற்றுமொழிகளையும் இங்குக் கவனிக்க. படிமை அல்லது படிப்பு எல்லாவகைப் படிப்பையு முணர்த்துமாயினும், முன்காலத்தில் வேதாந்தஞானம் பெறுவதையே மெய்ப்படிப்பாய்க் கருதினராகையால், படிமை என்ற பதத்திற்கு இளம் பூரணர் கூறியவாறு சிறப்புப்பொருள்கொள்ளப்பட்டதென்று நினைக்கலாம். அவ்வாறே, ஒத்து என்றதன்பொருள் பொதுவாய் 'ஓதப்படுவது என்றிருப்பினும் "மறப்பினுமோத்துக்கொளலாகும்" என்றவிடத்து, வேதமென்றும், "அகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாம்" என்றவிடத்து வேதாந்தஞானம் என்றும் பொருள்படுதல் காண்க.

கே. ஜி. சேஷையர்.

---

ஸ்ரீ:

# தொல்காப்பியக் கல்லாடருரை.

ஒல்காப்பெருமைத் தொல்காப்பியமுனிவ ரருளிய விலக்கண நூலுக் குரைவகுத்த பெரியோர் உரையாசிரியரும், சேனவரையரும், பேராசிரிய ரும், நச்சினார்க்கினியரும், கல்லாடருமாவர். அவர்களியற்றியவுரைகளுள் உரையாசிரிய ரிளம்பூரணருரை தொல்காப்பியம் முழுமைக்கு முள்ளது. சேனவரையருரை சொல்லதிகாரத்திற்கே யுள்ளது. பேராசிரியருரை சொல்லதிகாரத்திற்கும் பொருளதிகாரவிறுதி நான்கியல்கட்கு முள்ளது. நச்சினார்க்கினியருரை முதல் இரண்டதிகாரங்கட்கும் பொருளதிகார முதல் ஆறியல்கட்கும் இப்பொழுது காணப்படுவது. கல்லாடருரையோ சொல்லதிகாரத்திற்குள்ளும் சிறிதுபாகத்துக்கே நிரம்புதலில்லாதநிலை யில் அருகியிருக்கிறது.

இதன் பிரதியொன்று "தொல்காப்பியம்—கல்லாடனார்விருத்தி" என்றபெபருடன் சென்னை இராசாங்கக் கைபெழுத்துப்புத்தகசாலையில் இருப்பதாகத்தெரிகிறது. இவ்வுரையெழுதிய கல்லாடனார் சங்கத்துச் சான்றோருள் ஒருவராகிய கல்லாடனார்தாமோ அன்றி அப்பெயர்கொண்ட வேறொருவரோ என்பதே ஈண்டாராயப்புக்க விஷயமாகும்.

இவ்வாராய்ச்சிவிஷயமாக அவ்வுரைப்பிரதியுண்மையைக் கண் ணுற்ற ஸ்ரீமான் சேஷகிரிசாஸ்திரியார் (M. A.) அவர்களுடைய அபிப் பிராயமாகவுள்ள வாக்கியங்கள் முதலிற் கவனிக்கத்தகும். அவை,— "The work under notice is a commentary on the second part of the Tolgappiyam, viz, the chapter on Etymology, attributed to Kalladar, one of the poets of the third Tamil Sangam and author of the famous poetical work Kalladam and portions of Agananuru, Purananuru, Kurundogai and Tiruvalluvamalai; but from the nature and style of the commentary under notice, one would naturally be led to the conclusion that *the commentary is the production of a very inferior hand*"* என்பனவாம். இவற்றால் அவ்வுரை சங்கப்

* Report on a search for Sanscrit and Tamil manuscripts for they are 1893, 94, No. 2. Page 111.

புலவாகிய கல்லாடனூரா லியற்றப்பட்ட பெருமையுடையதென்று கொள்ள இடமில்லையென்று வெளியாகிறது. அதனை யடிப்படையாகக் கொண்டு பழயதமிழ் நூலுரைகளை யாராயப்புக்கவிடத்து அவர்கள் கூறுவது உண்மையுடையதென்றே விளங்குகிறது.

உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள், ஆனைப்புலமைச் சேனாவரையருள்ளிட்ட தொல்லாசிரியர் பல்லோரானும் பெருஞ்சுட்டுப் பெற்றவர். சேனாவரையர் உரையாசிரியரைக் குறிக்கநேர்ந்தவிடத்தெல்லாம் அவர்மாட்டு மிகுந்த அச்சத்துடனும் மரியாதையுடனும் எழுதிச்செல்வர் என்ப. இன்னும், "முன்னூ லொழியப் பின்னூல் பலவினும், நன்னூ லார்தமக் கென்நூ லாரு, மிணையோ வென்னுந் துணிவே மன்னுக" என்று முதன்மைபெறுதற்கேற்ற சிறப்புக்குரிய 'நன்னூலாசிரியரும் தம் சூத்திரங்கள் சிலவற்றை இளம்பூரணருரைக்கருத்தைத்தழுவியே இயற்றிப்போந்தா' ரென்றுங் கூறுப. இதனாலும் அவ்வுரையின்பெருமை விளக்கமுறும். நன்னூலுரையாசிரியரான மயிலைநாதரும், இவ்வுரையாசிரியரைக் கூறுமிடத்து, "உளங்கூர் வேள்வி இளம்பூ ரணரெனு, மேதமின்மாதவர்" என மிகுந்த நன்குமதிப்புடன் குறிப்பர். அடியார்க்கு நல்லாரும், "உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள்" என்றும், "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்" என்னுஞ் சிலப்பதிகார அடியுரையில், குமரியாறு கடல்கொண்டசெய்தி, "எற்றாற் பெறுதுமெனின் நக்கீரர் உரைத்த இறையனர் பொருளுரையானும் இளம்பூரணவடிகள் முகவுரையானும் பெறுதும்" என்றும் உரையாசிரியரைப் பெயர் குறித்துள்ளார். அன்றியும் கற்றோர் பலரும் இளம்பூரணரையே தொல்காப்பியத்துக்கு முதன்முத லுரைகண்ட பெருமைக்குரியவரென நாட்டினர்.

இனி, சேனாவரையாது பெருமையை நோக்குமிடத்து அஃதெம்மாலளந்துரைக்குந் தரத்தினதன்றென்பதைக் கற்றோர்பலரும் நன்கறிவர். அவர் நச்சினார்க்கினியாற் குறிக்கப்பட்ட பழமை வாய்ந்தவர். இன்னும் தொல்காப்பியப் பாயிரவிருத்தியானும் பிறவற்றானும் அவருரையின் பெருமை இனிது விளங்கும்.

அவர்களோ டொப்பவே பேராசிரியரும் பல வுரையாளராற் குறிக்கப்பட்ட பழமையும் பெருமையும் உடையோராவர். நச்சினார்க்கினியர்

தொல்காப்பியக் களவியலுரையின்கண்ணே "நாட்டமிரண்டு மறிவுடம் படுத்தற்குக், கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்" என்னுஞ் சூத்திர வுரையில் "இங்ஙன மிதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குங் கருத்தாதல் 'புகுமுகம் புரிதல்' என்னும் மெய்ப்பாட்டியற்சூத்திரத்தா னுணர்க. அதற்குப் பேராசிரியர் கூறிய உரையானு முணர்க" என்று பேராசிரிய ருரையினைச் சுட்டிச் செல்வர். அன்றியும், யாப்பருங்கலவிருத்தியினும் "பிறைநெடுமுடிக் கறைமிடற்றானர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்" "நீர் பயின்ற வார்சடையோன் பேர்மகிழ்ந்த பேராசிரியர்" "பெண்ணொருபாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்" "திரிபுரமெரித்தவர் பெயர் மகிழ்ந்த பேரா சிரியர்" "வாமமேகலை மாதையோர் பாகனர் நாமமகிழ்ந்த நல்லாசிரியர்" எனப் பலவாறாக அவர் பாராட்டப்பெறுதலைக் காணலாம். இன்னும் அவர் "நல்லறிவுடைய தொல்பேராசான்" என்றும் சிறப்பித்துச் சொல் லப்படுவர். நன்னூல்விருத்தியுரைகாரரும் 'ஆத்திரையன் பேராசிரியன்' என இவர்பெயரைக் கூறியுள்ளார்.

இது நிற்க, நச்சினார்க்கினியரோவெனின், அவரும் அங்ஙனமே உரையாசிரியரென் றெண்ணப்படும் பெருமையிற் சிறந்த பகுதி பெறுதற் குரியரென்பது கற்றோர் பலரும் நன்கறிந்தது. அதனை அவருடைய உரைச்சிறப்புப்பாயிரத்தாலும் பிறவற்றானு மறியலாம். "வேதபோத, நச்சினார்க் கினியா னெச்சினருந்தமிழ் நுகர்வர் நல்லோர்" என்பதும் ஆன் றோர் கூற்றும்.

ஆகவே, இங்ஙனம் தொல்காப்பியத்திற்கு உரையிட்ட பெரியோர் களின் பழமை பெருமைகளை முன்னோருரைகொண்டு ஒருவாறு எடுத் துக் காட்டினேன். அதனால் உடனெத்த கல்லாடருரையும் அவ்வாறு தமிழ்நூலுரைகளில் யாண்டும் பயிலாமை அதன் பழமையில் நம்பிக்கை வைப்பதற்கு விழைவுடைய நம்மனோர்க்குப் பெரிதும் இடையூறாய் நிற் பது நன்குவிளங்கும்.

தொல்காப்பியச்சொல்லதிகாரத்திற்கு நிரம்புதலில்லா இவ்வுரையியற் றிய ஆசிரியர், கடைச்சங்கத்துப் புலமைவகித்து, அகநானூறு, புற நானூறு குறுந்தொகை முதலிய நூல்களின் சில பாடல்களியற்றியவரு மாகிய, கல்லாடரேயாயின் அவர் இளம்பூரணர் முதலிய உரையாசிரியர் களுக்குக் காலத்தால் மிகவும் முற்பட்டவரே யாகவேண்டும். ஆகவே

அவருரைபற்றிய குறிப்புக்கள் பண்டையுரை நூல்களுள்ளே மேற்கோளாக நன்குமதிப்புடன் பயிலவேண்டுவதும் இன்றியமையாத தாகும். அங்ஙனமாக முன்னோர் யாரும் தொல்காப்பியக் கல்லாடருரையைப்பற்றிக் கூறாததே அது சங்கப்புலவராகிய கல்லாடராற் செய்யப்பெற்றதன்றென்பதற்குச் சான்று பகர்கின்றது.

இக்கொள்கை இன்னும் மற்றொரு சிறந்த நியாயத்தானும் வலியுறும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின்கண்ணே,

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவரல பிறவே
யாயிரு திணையி னிசைக்குமன சொல்லே."

என்பதே முதற்சூத்திரமாதலைக் கற்றோர்பலரும் நன்கறிப. அதற்குக் கல்லாட ரெழுதியவுரையில் என்மனா ரென்னுஞ்சொல் பின் வருமாறு விளக்கப்படுகிறது. அதாவது:--

"என்மனாரென்றது என்பவென்னு முற்றுச்சொல்லினைக் குறைக்கும்வழிக்குறைத்தலென்பதனால், பகரங்குறைத்து விரிக்கும்வழிவிரித்தலென்பதனால் மன்னுமாருமென் றிரண்டிடைச்சொற்பெய்துவிரித்து என்மனா ரென்றாயிற்று. இம்முற்றுச்சொற்குப் பெயராகிய ஆசிரியரென்பது செய்யுள்விகாரத்தாற் றொக்கது. இஃ தெச்சவகை. என்றார் எனற்பாலதனைக் காலமயக்கத்தால் என்ப என்றாரென வுணர்க" என்பதே. உரையாசிரியரான இளம்பூரணவடிகளுருரையிலும் 'என்மனர்' என்பதற்கு இங்ஙனமே யுள்ளது. இதனை, சொல்லதிகாரமுதற்சூத்திரத்தின் அவருரைப்பிரதிநோக்கி யுணர்க. இனிச் சேனாவரையர், என்மனாரென்பதற் குரைக்குங்கால் "என்மனாரென்பது செய்புண்முடிபெய்திநின்றதோ ராரீற்று நிகழ்காலமுற்றுச்சொல். என்றிசினோர் கண்டிசினோர் என்பனவும் அவ்வாறு வந்த நிகழ்காலமுற்றுச்சொல். என்பவென்னு முற்றுச்சொல்லினது பகரங் குறைத்து மன்னுமாருமென விரண்டிடைச் சொற்பெய்துவிரித்தாரென் றுரையாசிரியர் கூறினாராலெனின் என்மனாரென் றிடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது நூலுள்ளுஞ் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்றுவருதலானும் இசைநிறையென்பது மறுத்துப் பொருள்கூறுகின்றார் பின்னும் இசை நிறையென்றல் மேற்கோண்மலைவாதலானு மவர்க் கது கருத்தன்றென்க. மாணாக்கர்கட் குணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக்கூறாது உய்த்துணரவைத்த லவர்க் கியல்பாகலாற்

செய்யுண்முடிபென்பது கூருராயினர். என்மனு ராசிரியரெனவே யுயர் திணை யஃறிணை யென்பன தொல்லாசிரியர் குறியாம்." எனக் கூறினமை யாவரும் நன்கறிந்தது. இவ்வாறு கூறிய சேனவரையர், கல்லாடருரை யிற் கூறிய வழுவினை எடுத்துக் காட்டிக் களையாது, உரையாசிரியருரை யின்கட் காணப்படுவதனை, அவருரை யன்றென்றுதோன்ற இடைச் செருகலென்று குறிப்பாற் பெறவைத்து விலக்கினமையால், சேனவரை யர்காலத்து இக் கல்லாடருரை பயிலப்பெற்றிலதென்பது நன்கறிய லாகும். இச்சூத்திரவுரையில் நச்சினர்க்கினியரும், என்மனுரென்பதற் குக் கல்லாடருரையிற்கூறிய இலக்கணத்தை எடுத்துக்காட்டிக் களையாது சேனவரையர் கூறியதனையே தழுவிச்சென்றமையால் நச்சினர்க்கினியர் காலத்தும் இக்கல்லாடருரை வழங்கப்படவில்லையென்பது சொல்லாமலே விளங்கும். சொல்லதிகாரத்திற்கு உரைவகுப்பான்புகுந்த சேனவரையர் முதலியோர் அதற்கு,மிகப்பழமையான கல்லாடருரையொன்றுண்மையை அறவே மறந்தொழிந்தனரென்பது சிறிதும் கொள்ளற்பாலதன்றும். ஆக வே இக்கூறியவற்றுற் கல்லாடனர்விருத்தி என இக்காலத்து வழங்கு வது உண்மையிற் சங்கப்புலவராகிய கல்லாடனுரியற்றிய வுரையன்றென் பது போதரும். எனவே யவ்வுரை பிற்காலத்தாருள் அப்பெயர்புனைந்தார் யாரோ வொருவர் இயற்றியதென்றேனும், அன்றி முற்காலத்ததேயாயின் அது ஏனையுரையாளரால் நன்குமதிக்கப்படவில்லை யென்றேனுங் கொள்ளத்தகும். கொள்ளவே அவ்வுரை ஏனையோருரைகளுடன் மாறு பட்டுழித் தக்க சான்றுகும்வலியிலதா மென்பதும் எளிதி னறியப்படும்.

இனிக் கல்லாடரென்ற பெயர்கொண்டார் பலர் இருந்திருக்கலா மென்பதற்கும் சான்று காணப்படுகிறது. செந்தமிழ் தொகுதி 4, பக்கம் 261-ல்,புதுக்கோட்டையைச் சேர்ந்த சாஸனம் ஒன்றுனும், வாதவூரடிகள் "கல்லாடம்.........தனில்" எனக் கூறியதனுலும் ஸ்ரீமான்-து. அ. கோபி நாதராயரவர்கள், கல்லாடம் என்பதோரூர்ப்பெயரென்று காட்டியிருக் கிறார்கள். கல்லாடம் எனப் பெயரிய ஊரின்கண்ணேவதிந்த தமிழா சிரியர்கள் கல்லாடனர் எனச் சிறப்புப்பெயர்பெறுதற்கேற்ற உரிமை யுடையோரென்றே நினைக்கிறேன். மற்றும் அறிஞர்கள் ஆராய்ந்து உண்மை யுரைப்பாராக.

T. N. அப்பனையங்கார்,
மதுரை.

———

உ

# திருநள்ளாறு.

---

கொய்யுலாம் மலர்ச்சோலை குயில்கூவ மயிலாலும் சோழவள நாட்டிலே அந்திப்பிறைவண்ணனது சடாபாரத்திலே வதியும் பாக்கியம்பெற்ற புண்ணியநதியான கங்கையின்பாவத்தையும் போக்க வல்ல புனிதமாம் காவிரிநதியின் தென்பாலுள்ள தெய்வத்தானங்கள் பலவற்றுள் திருநள்ளாறு ஒரு க்ஷேத்திரமென்பது பலரும் அறிந்தவிஷயமே. பாலறுவாயராம் திருஞானசம்பந்தப்பெருமான், "வண்டோதைமாறுமலர்வேணியின்வந்தநீத்த" மாயினும் என் விடாய்தணியாதென வெம்பிவீழ்ந்த குடையெடுக்குங் குறியதாட் குறளாம் குண்டோதரன்பொருட்டு வந்த வான்யாறும் வையைசூழ் ஆலவாயிலே வளவர்கோன்பாவை வரிவளைக்கை மடமானியாம் பங்கயச்செல்வி பாண்டிமாதேவியாரின் வேண்டுகோட்படி திருமடத்திற்றங்கியகாலத்துப் புரட்டமண்குண்டரா லிடப்பட்டதீயைச் சிட்டர் நோக்கி அத்தீயினைத் தென்றமிழ்க்கூட லட்டமூர்த்தியை யங்கிருந்து அருமறைப்பதிகம் பாடித் துட்டர் பொய்யுரைமேற்கொண்டு தொன்முறைதுறந்துவிட்டவேந்தனைப் பற்றும்படிசெய்தகாலத்து மங்கையர்க்கரசியாரால் வேண்டப்பட்டபடி அவன் வெப்புநோய்தீர்ந்ததும் பறிதலைக்குண்டர் கழுவேறியதும் உலகறிந்ததே.

கவுணியர்குலக்கொழுந்து பின்னர் மதுரைமாநகரினின்றும் நீங்கிப் பலதலங்களையும் தொழுது கண்ணுதலார் திருத்தொண்டர் பலருஞ்சூழ மணமேற்குடியிற்றங்கிச் சிலநாட்கழித்து மங்கையர்க்கரசியார்க்கும் இடையறுவன்புபூண்ட மந்திரியார் குலச்சிறையார்க்கும் விடைகொடுத்துப் பொன்னிவளநாடுபுகுந்து திருக்களருடைய நாயகனைச் சேவித்துப் பாதாளீச்சரம்புகுந்து முள்ளிவாய்க்கரையடைந்து ஓடம்விடுவாரின்றிக் "கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர் நட்டமாடிய நம்பனையுள்கச் செல்லவுந்துக" எனத் தாமே ஓடம்விட்டு வில்வவனநாதரைப் பணிந்து வசிக்குநாளில்,

“போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையுநாளிற் பூழியன்முன்
புன்சமயத் தமணர் தம்மோ
டேற்றபெரு வாதின்க ணெரியின் வேவாப் பதிகமுடை
யிறையவரை யிறைஞ்ச வேண்டி
யாற்றவுமங் கருள்பெற்றுப் போந்துமுன்ன மணைந்தபதி
களுமிறைஞ்சி யன்பர் சூழ
நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா
யகர்கோயி னண்ணி னாரே. (பெரி. திருஞா. 901)

என்று காணப்படுகிறது.

கன்மனமுங் கரைந்துருகப்பாடிய மதுரவாசகனும் திருவாசக முடையாரால், கல்லாடத்துக் கலந்தினிதருளியுமேன் றேத்தப்பட்ட பெருமைவாய்ந்த பனுவலின் 61-வது செய்யுளிலே

மதுமல ரலர்ந்த மதுமயக் காலே
யெழுசிறை தியு மெருவையும் பருந்துங்
குவளையுங் காட்டுக் குருகொடு புதாவே
வலியழி பகடு வாய்நீர்ச் செங்நாய்
தழைமடி மேதியும் பிணரிடங் கருமே
பட்டுலர் கள்ளி நெற்றுடை வாகை
சுருள்விரி சாலியுங் குலையரம் பையுமே
வடதிரு வால வாய்திரு நடுவூர்
வெள்ளி யம்பல நள்ளா றிந்திரை
பஞ்சவ னீச்சர மஞ்செழுத் தமைத்த
சென்னி மாபுரஞ் சேரன் றிருத்தளி
கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை
விண்ணுடைத் துண்ணுங் கண்ணிலி யொருவன்
மறிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த
களவுடல் பிளந்த வொளிகெழு திருவேற்
பணிப்பகை யூர்தி யருட்கொடி யிரண்டுடன்
முன்னும் பின்னு முதுக்குள நிறைந்த
வருவியஞ் சார லொருபரங் குன்றஞ்
சூழ்கொள விருந்த கூடலெம் பெருமான்

என்று காணப்படுகிறது. இவ்வகவலிற் கூறப்பட்ட தெய்வத்தானங்களாவன:—

1. வடதிருவாலவாய்:—முழுதுணர்ந்த கபிலன் றன்பாற் பொழிந்த பெருங்காதன்மிகுகேண்மையினன் இடைக்காட்டுப் புலவன் அரிதிற் பாடிக்கொணர்ந்த பனுவலைக்கேட்டு வழுக்காத சொற்சுவையும் பொருட்சுவையும் பகிர்ந்தருந்தவல்லோனும் குலேச பாண்டியன் ஒன்று முரையான் வாளாவிருத்தலைக் கண்ட புலவன் மானம் புறந்தள்ள எம்பெருமானுறை கோயினண்ணிச் சன்னிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானே தன்னைச் சேர்ந்தார் நன்னிதியே இப்பாண்டியன் என் பனுவல்கேட்டு வாளாவிருத்தல் தகுதியோவென்ன வவன் பின்சென்று தங்கியவூர்.

2. திருநடுவூர் தெரியவில்லை.

3. வெள்ளியம்பலம்:—உலகமுழுதீன்ற பசுங்கன்னி திருமணத்துக்கு வந்த மத்தியந்தமுனிவரது புதல்வரான மழமுனிவர் தமது பத்திமகிமையாற்பெற்ற புலிக்கால்களுங் கண்களுமுடைமையாற் புலிக்காலன் எனப் பெயர்பெற்ற வியாக்கிரபாதரும் தாருகவன நடனங் காணவிரும்பிய ஆதிசேடன் அனுகூலையயின் அஞ்சலியிற் றோன்றிய காரணத்தால் பதஞ்சலியான முனிவரும் நின் னருணடங் கண்டுண்பது அடியேங்கள் நியமமென்று கூற, அக்கூத்தை இவ்வாலவாயிலே செய்த இடம்.

4. நள்ளாறு:—தெரியவில்லை.

5. இந்திரை:—துருவாசமுனிவரதுசாபத்தாற் காட்டானையாகத்திரிந்து கடம்பமாவனத்தாதியைப் பூசித்து இந்திரன்பேரால் தாபித்த தலம் இந்திரை.

6. பஞ்சவனீச்சரம்:—தெரியவில்லை.

7. அஞ்செழுத்தமைத்த சென்னிமாபுரம்:—சோழபுரமென்பர் உரையாசிரியர்.

8. சேரன்றிருத்தளி:—தெரியவில்லை.

9. கன்னிசெங்கோட்டம்:-அழிவில்லாத செங்கோட்டம். இது இப்பொழுது சேங்கோட்டை என்று வழங்கப்படும் ஊரோமோ என்று ஊகிக்கப்படுகின்றது.

10. கரியோன்றிருவுறை:—திருமாலது அழகிய சோலைமலை.

11. அருவியஞ்சாரல் ஒரு பரங்குன்றம்:—ஒப்பற்ற திருப்பரங்கிரி.

சூழ்கொளவிருந்தகூடல்—இந்தத் தெய்வத்தானங்களாற் சூழப்பட்ட மதுரைமாநகரம் என்ப.

இதுகொண்டு, கல்லாடர்காலத்தில் (காலத்தைப்பற்றி பின்னர் ஆராய்வாம்) திருநள்ளாறு என்ற ஒரு க்ஷேத்திரம் இருந்ததென்பது வெள்ளிடைமலையாம்.

அங்ஙனமாயின், சீகாழிப் பெருவாழ்வின்காலத்து இத்தெய்வத்தானங்கள் இருந்தனவா? அவை இப்பொழுது எவ்வாறு உருமாறிக் கிடக்கின்றன என்பதை அன்பர்கள் கருணைகூர்ந்து தெரிவிப்பார்களாயின் பின்னர் எனது ஆசங்கைகளை வெளியிடுவேன்.

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர். சோமசுந்தரதேசிகன்.

---

## இமயமலை.

---

இலகுசீர்ப் பிருதுகாட் டுலகாம் பசுக்கட்
பிறங்குநன் மணிமருத் திலைகளாம் பாலை
மேருவைக் கைவல கேவல னாக்கிக்
கறப்பா னெனப் பொறைகளாற் கன்மூக்
கொள்ளத் தக்கதும்; குணங்களுக் கிடையிற்
பட்டதோர் குற்றமும் பண்புறு மாதலிற்
பான்மதி யிடையிற் காண்முய லென்னப்
பன்மணி யிமைப்பிற் பனியா லணியிற்

குன்று திருப்பதும்; நன்றுத் தேவ
மங்கையர் கண்டுநன் மாலைப் பொழுதென
மயங்கித் தம்மை மதிக்கப் புனைதல்
செய்வான் சிதைந்த செல்லின் றிரளைச்
செம்மை நிறமாச் செயவல சீர்சால்
செங்கற் பொடிகளைச் சேர்ந்த சிரசைப்
பெற்றதும்; வெயிலில் வெதும்பிய சித்தராண்
டரைசேர்ந் தலைகா ரணிநிழ லமைந்த
தாழ்வரை யதனிற் றங்கியு மழையால்
வெருட்டப் படுங்கான் மேனிலை யுற்றுங்
காலம் போக்கச் சாலச் சிறந்ததும்;
வேடர் வேழம் வீழ்த்தரி மாவின்
கறையுறு மடியைப் பனியுறைந் தழிப்பக்
காணு ராகக் கானுகி ரிடைபிற்
றெறித்துச் சிந்திய முத்தின் றொடர்பிலச்
சிங்கஞ் செல்லத ரிங்கென் றன்னார்க்
கறிவிப் பதுவும்; அன்பர்க் குள்ளக்
கருத்தைத் தெரிப்பான் காதலில் விச்சா
தரமங் கையருக் கிதழாய்ச் செங்கற்
பொடிநீர் மையாற் பொறிக்கத் துணையாக்
கரிமுதிர் பருவத் தூறுகுறிச் செம்மை
நிறமமைந் துடையபூர்ச் சாவுரி யுடைத்தும்;
பாண்மிழற் றுறுகின் னரர்க்கியை பாகத்
தான்குகை வாயிற் காற்றை மூங்கிற்
றுளைவழி நிரப்பிச் சுருதியாக் கொடுக்குந்
தன்மையுற் றிலகுந் தரத்ததும்; தானப்
பெருக்காற் கன்னத் துண்டா மரிப்பைத்
தணிப்பா னுராய்ந்த சரலத் தருநின்
றிழிந்த பாலின் பொழிவா லடித்தாழ்
வரையை மணத்த தாகச் செய்வதும்;
கன்னிய ருடனுக் காடலை வேட்டுவ
ரின்பந் துய்த்திடு மில்லக் குகையுற்

திரவியின் ஞெளிக்காங் கெண்ணெயின் றெளிரும்
பச்சிலை யொளியைப் பரப்புவ தாயதும்;
நளியால் விரலை நடுங்கச் செயுமா
வழியினி லுறைந்த பனிநனி மிகுத்த
தெனினும் பாய்மா முகமங் கைபர்தந்
தலைச்சுமை யனக்கத் தாங்கார் தளர்ந்த
நடையிற் செல்லற் கிடமா கியதும்;
அனைத்திலுந் தாழ்ந்தோ ராயினு மவரைச்
சரணம் புகுவா ராயிற் றம்மவ
ராக்கொண் டருளுவ தான்றோர் வழக்காற்
பகலவ னெறுக்கப் பயந்தடை பகலின்
பகைக்குத விடமாப் பகர்குகை யுடைத்தும்;
விரியுஞ் சந்திர கிரணம தென்னத்
தெரியும் வெள்ளிய வாலைக் கவரி
மாவிரித் தசைத்திம் மண்டலத் தேனைப்
பொறைகட் கிறையாந் தன்மையைப் பொருளாச்
செய்வதொத் தங்கு மிங்குந் திரிதற்
கிடமா கியதும்; தடமாக் குகையின்
முன்றிலி லுருவோ டொன்றித் தொங்கித்
தானையை யிழந்து நாணுகிம் புருட
மங்கையர்க் கென்று நிலையிற் றுங்கத்
திரையாத் தோன்றும் பலகரு மேகம்
படரிட மாயதும்; பகிரத னளித்த
கங்கைப் பெருக்கிற் கிளைத்த துளியிற்
கலந்து குளிர்ந்துங் காவலர் தேவ
தாருவிற் றுக்குவ தான்மணம் பெற்றும்
மாக்களை வேட்ட மாடி மாய்க்கும்
வேட்டுவ ரரையிற் பூட்டிய மயிலின்
பீலிற் பட்டுச் சாலவும் மென்மையைக்
கொண்டுமாங் குறைநர்க் கின்படிக் கடிதருங்
காற்றிற் கிடமா யிருப்பதும்; மீமிசைப்
பொய்கையுட் டோன்றிய பொற்று மரையுட்
கையா லிருடிய ரெழுவருங் கொய்தன
போக்கிநிற் கிருக்கும் போதுகள் மலரக்
கீழே சுற்றுங் கதிரோன் கிரணந்
தம்மை மேலே தான்விரித் திடுமா
றத்துணை யுயர்ச்சியொ டிருப்பதும்; அன்றியும்
வேள்விக் குறுபொரு ளுடைமையும் புவியின்
பொறையைத் தாங்கு முறுதியுங் கண்டபின்
மகத்திற் பாகம் பெறும்பே றுடனெம்

மலைக்கு மதிபதி யாம்பேற் றினையுந்
தானே பிரமன் றகுதியென் றளிக்க
நிலமடந் தைக்கோ ரளவுகோன் மானக்
குணகுட கடலுக் கிடையிற் கிடையாத்
தெய்வத் தன்மையொ டிமையப் பெயர்பூண்
டிருப்பது மாமலைக் கிறையொன்
றுளதால் வடதிக் குற்றுநன் குயர்ந்தே.

பாராத காலத்தும் பார்த்தவனைப் போலமிகு
பேராசை கொண்டிமயப் பேரரசன்—சீராகத்
தந்தே னுயர்காளி தாசன் கருத்திஃது
வந்தா தரிப்பீர் மகிழ்ந்து.

ஊ. சா. வேங்கடராமன்,
—— தண்டமிழ்த்தொண்டன்.

# சில செய்யுட்கள்.



தன்மசக்கரப்பிரவர்த்தநாசாரி அடிமலரேத்திக் கல்வி கேள்விகளிற் சிறந்த மாட்சிமைபெற்ற செந்தமிழ்ப் பத்திராதிபாவர்கட்கும் விஷய தானஞ்செய்யும் செந்தமிழ்ப்புலமை மிக்க பண்டிதசிகாமணிகட்கும் விஞ்ஞாபனம்.

ஐயன்மீர்! பின்வரு மொன்பது மூவடிவெளிவிருத்தங்களும் எனக்குக்கிடைத்த "பழந்தமிழ்க்கவிக" ளென்னும் புத்தகத்திலுள்ளன. அச்செய்யுட்களின்முன்னர், "பிரிவாற்றுமைற்பாடிய மூவடிவெளி விருத்த" மென்றுமாத்திரம் வரையப்பெற்றிருந்ததன்றி நூற்பெயர், ஆசிரியர்பெயர் முதலியவை வரையப்பெற்றில.

இவ்வொன்பது மூவடிவெளிவிருத்தத்துள், முதலிரண்டும் வீரசோழியம் யாப்புப்படலம் 15ம் சூத்திரவுரையிலும், முத்துவீரியம் யாப்பதிகாரம் செய்யுளியல் 33ம் சூத்திரவுரையிலும், மற்றுஞ் சில செய்யுணூலிலும் சிற்சில பாடபேதத்துடன் இருப்பது யாருமறிந்ததே.

மற்று மேழு செய்யுட்களும் என் சிற்றறிவிற்கெட்டிய நூல்களிலெவ்விடத்தும் அறிவ தரிதாகவிருக்கின்றமையால் அறிந்த பெரியோர்கள் நூற்பெயர், ஆசிரியர்பெயர் முதலியவற்றுடன் விளக்குவாராயின் எமக்கு மெம்போன்ற தமிழபிமானமானவர்கட்கும் ஒருசிறி தூக்க மதிகரிக்குமென்ற பேரவாவோடு இவ்விஷயத்தை வெளியிடலாயினேன்.

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

## பிரிவாற்றாமற்பாடிய மூவடிவெளிவிருத்தம்.

கொண்டன்முழங்கினவாற்கோடல்பரந்தனவாலென்செய்கோம்யாம்
வண்டுவரிபாடவார்தளவம்பூத்தனவாலென்செய்கோம்யாம்
எண்டிசையுந்தோகையிசைந்தகவியேங்கினவாலென்செய்கோம்யாம். (1)
வீரசோ—முத்துவீரியம்.

மருளறுத்தபெரும்போதிமாதவரைக்கண்டிலமாலென்செய்கோம்யாம்
அருளமர்ந்ததிருமொழியாலறவழக்கங்கேட்டிலமாலென்செய்கோம்யாம்
பொருளறியுமருந்தவத்துப்புரவலரைக்கண்டிலமாலென்செய்கோம்யாம் (2)
வீரசோழியம்.

உலகமிருண்டனவாலுள்ளொளிபிரிந்தனவாலென்செய்கோம்யாம்
இலகுமொளிகுளிர்ந்துளங்கும்பரந்தனவாலென்செய்கோம்யாம்
சலமலிந்தகடலலைகள் சாலவமர்ந்தனவாலென்செய்கோம்யாம் (3)

குலமரபோர்கூடுமொருகூக்கல்முழங்கினவாலென்செய்கோம்யாம்
கலகலெனுங்கிண்கிணியாரகாதல்நிறைந்தனவாலென்செய்கோம்யாம்
பலகலையுமீர்ந்ததொனிபாகல்மறைந்தனவாலென்செய்கோம்யாம் (4)

அமுதவாக்கின்மொழியாம்அறமுமறைந்தனவாலென்செய்கோம்யாம்
குமுதமலர்வீற்றிருந்தசோமான்மறைந்தனவாலென்செய்கோம்யாம்
சமுகசுகவாருதியின்சூழலமர்ந்தனவாலென்செய்கோம்யாம் (5)

கங்குல்பரந்தனவாற்காந்தள்நிறைந்தனவாலென்செய்கோம்யாம்
சங்கங்குமிங்கினவாசாக்கையொடுங்கினசாலென்செய்கோம்யாம்
எங்குமமர்ந்தகுருவங்கமறைந்தனகாலென்செய்கோம்யாம் (6)

எல்லாமுணர்ந்தமொழியார்பாலுணர்ந்தறிவோமென்செய்கோம்யாம்
கல்லாலமர்ந்தசுகக்காட்சியெங்குகண்டறிவோமென்செய்கோம்யாம்
சொல்லாலுணர்த்துசுகருட்சமொழிகண்டறியோமென்செய்கோம்யாம் (7)

சிலசுகமளித்தசெல்வநிலையெங்குணர்வோமென்செய்கோம்யாம்
காலநிலையைவென்றகாட்சிதனையென்றுணர்வோயென்செய்கோம்யாம்
வாலவறிவமர்ந்தோன்வாய்மொழியைக்கேட்டிலமாலென்செய்கோம்யாம் (8)

தக்கநிலைநாலுணர்ந்தத்தூயவனைக்கண்டிலமாலென்செய்கோம்யாம்
பக்குவமெய்ப்பாங்குரைக்கும்பரதன்மொழிகேட்டிலமாலென்செய்கோம்யாம்
திக்கெட்டுணர்ந்தானின்தேய்வுநிலைக்கண்டறியோமென்செய்கோம்யாம் (9)

(இன்னுஞ் சிலசெய்யுட்கள் பின்னும் வரும்.)

ப. மு. மதுரையார்.
தமிழ்மாணவன்.

## பிழை திருத்தம்.

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௨ | தமழிற் | தமிழிற் |
| ௭ | ௧௩ | சிரடி | சிறடி |

---

## பிம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

### பிம்முதலொருபெயர்

பிங்கலனென்பது குபோனுகும் க
பிஞ்சந்தானேபிறகெனலாகும் உ
பிடவமென்பது மாக்கோடாகும் ௩
பிட்டகமேசிற்றுண்டியாகும் ௪
பிசிலென்பதுவேசோறெனலாகும் ௫
பிபீலிகைதானேயெறும்பெனலாகும் ௬
பிண்டபாகமேபிச்சையாகும் ௭
பிதாமகனென்பது பிரமன்பெயரே ௮
பித்திகையென்பதுசிறுசெண்பகமாம் ௯
பித்தைதானேமாதர்மயிராம் க0
பிரம்பமென்பது கோவைக்கொடியாம் கக
பிறக்கந்தானேமரக்கொம்பாகும் கஉ
பிறற்றலென்பதுவேயோசையாகும் க௩
பிரமரந்தானேவண்டெனலாகும் க௪
பிசுமந்தமென்பதுவேம்பெனலாகும் க௫
பிரியென்பதுவேவெருகெனலாகும் க௬
பிராவந்தானேமலையெனப்படுமே க௭
பில்லியென்பது பூனையாகும் க௮
பிராகிருதந்தான்வடமொழியெனப்படும் க௯
பிசிரென்பதுவே திவலையாகும் உ0
பிசனியேகள்ளனவியம்பினரே உக
பின்னகமென்பது மயிர்முடியாகும் உஉ
பிளிறலுனேயோசையாகும் உ௩
பிள்ளுவமென்பது குஞ்சரத்தின்பெயர் உ௪
பிறக்கடையென்பது புறக்கடையாகும் உ௫

பிறழாமைதானேபோறாமையாகும் ௨௬
பிழியென்பதுவேகள்ளெனலாகும் ௨௭

பிம்முதலொருபேர்முற்றும்.

பிம்முதலிருபெயர்

பிணரேகோங்குசர்ச்சரையிருபேர் ௨௮
பிங்கமேகுராற்பசுவும்பூளையும் ௨௯
பிங்கலையேயோர்வாயுவுமாந்தையும் ௩0
பிடகமேதந்திரமும்வேதமும் ௩௧
பிணவலேகாப்பெண்ணெனவிருபெயர் ௩௨
பித்தனென்பதுகள்ளனும்பித்தனும் ௩௩
பித்திகையென்பதுவேசுவர்த்தலமுங்
கருமுகையெனவுங்காட்டுமிருபெயர் ௩௪
பிரமசரியமென்பதுதவமு
மறையோரென்வுமருவுமிருபேர் ௩௫
பிறக்கேபின்புறம்வாழ்வெனவிருபேர் ௩௬
பிறவினையென்பதுகாமமும்பாவமும் ௩௭
பிறங்கடையேவழியசலெனவிருபேர் ௩௮
பிறந்தையேபவம்பாவமிருபேர் ௩௯
பிலவங்கமென்பதுதேரையுங்குரங்கும் ௪0
பிண்டமென்பதுபிச்சையுந்திரளையும் ௪௧
பின்னையென்பதுமாயோன்றேவியும்
பித்தையுமெனவேபேசுமிருபேர் ௪௨
பிசுனனென்பதுபொய்யனுங்கோளனும் ௪௩
பிறழ்வேயவிர்தலும்பெயர்தலுமிருபேர் ௪௪
பிப்பிலந்தானேயச்சுவத்தமுந்
திப்பிலியெனவுஞ்செப்புமிருபெயர் ௪௫
பிணியேகட்டுநோயுமிருபேர் ௪௬

பிம்முதலிருபேர்முற்றும்.

### பிம்முதன்முப்பெயர்

பிசிதந்தானேயிறைச்சியும்வேம்பு
நீருமெனவேநிகழ்த்துமுப்பெயரே ௪௭

பிச்சமேவெண்குடையுமாண்மயிரும்
பீலிக்குடையும்பேசுமுப்பெயரே ௪௮

பிண்டியேகென்மாவுமசோகும்
பிண்ணாக்கெனவுமுப்பேர்பேசும் ௪௯

பிணிமுகமென்பதுமயிலுமெகினமும்
புள்ளின்பொதுவுமுப்பேர்போற்றும் ௫௦

பிளவுதானேபெட்டியும்வசியுங்
கட்டுமெனவேகருதுமுப்பேரே ௫௧

பிசியென்பதுவேசோறும்பொய்யு
நற்பொருளெனவுநாட்டுமுப்பெயரே ௫௨

பிதிரென்பதுவேநொடியுந்தூவலுங்
கதையுமெனவேகாட்டுமுப்பேரே ௫௩

பிறழ்தருனேபெயர்தலுநடுக்கமு
மொளிவிடலெனவுமோதுமுப்பெயரே ௫௪

பிள்ளையென்பதுவேகாரிப்புள்ளு
மகவும்வயிரவனுமுப்பெயரே ௫௫

பிம்முதன்முப்பேர்முற்றும்.

### பிம்முதனாற்பெயர்

பிணையேயாசையும்விலங்கின்பெண்ணு
நவ்வியும்பிணையுநாற்பெயராகும் ௫௬

பிரசமென்பதுவண்டுங்கள்ளுந்
தேனுந்தேனீயெனவுநாற்பெயரே ௫௭

பிரப்பேயரிசியுங்கடலும்பிரம்பு
நெய்யுமெனவேநிகழ்த்துநாற்பெயரே ௫௮

பிதாவென்பதுவேபிரமனுநாசையுந்
தாதையுஞ்சிவனுமெனநாற்பெயரே ௫௯

பிம்முதனாற்பேர்முற்றும்.

பிம்முதலெழும்பெயர்

பிறங்கலுனேயிறையுமுயரமு
மிருதியும்வெற்புநிறைவும்பெருமையு
மோக்கமெனவுமோதுமேழ்பெயர் சுO

பிம்முதலேழ்பேர்முற்றும்.

பிம்முதற்பன்னிருபெயர்

பிரமமென்பதுமாயனும்பிரமனு
மிரவியுநிலவுந்தீயும்வேதமு
ஞானமுமுத்திப்பதமும்வெள்ளியு
மந்திரமும்வேதாந்தத்துடனே
யிருடிகளெனவும்பன்னிருபேராம் சுக

பிம்முதற்பன்னிருபேர்முற்றும்.

பிம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஅO.

பீமுதற் பலபெயர்ச்சூத்திரம்.

பீமுதலொருபெயர்

பீடமென்பதுகோயிலாகும் க

பீதாம்பரனேமாயோன்பேராம் உ

பீந்துதலென்பதுகொடுத்தலாகும் ஙூ

பீதிதானேபயமெனப்படுமே ச

பீடிகையென்பதுபீடமாகும் ரு

பீமுதலொருபேர்முற்றும்.

பீமுதலிருபெயர்

பீலித்தண்டேமேபிண்டிபாலமு
மெலிகமுமெனவேயிசைக்குமிருபேர் சா

பீனமென்பதுபாசியும்பருமையும் எ

பீருவென்பதுமேயஞ்சினேன்பேரும்
புருவமுமெனவேபோற்றுமிருபேர் அ

பீமுதலிருபேர்முற்றும்.

பீமுதன்முப்பெயர்

பீரமென்பதுபீர்க்கும்வாகையும்
பூவரசெனவும்புகலுமுப்பெயரே ௯
பீரென்பதுவேபீர்க்கும்பசலையு
முலைப்பாலெனவுமொழியுமுப்பெயரே ௰

பீமுதன்முப்பேர்முற்றும்.

பீமுதனாற்பெயர்

பீதகமேயிருவெலியுஞ்சாந்தும்
புன்மையும்பொன்னும்போற்றுநாற்பெயரே ௧௧

பீமுதனாற்பேர்முற்றும்.

பீமுதலேழ்பெயர்

பீலியென்பதுமலையுங்கலாபியுந்
தோகையும்பொன்னுமாலவட்டமும்
வாச்சியமுஞ்சிறுச்சின்னமுமேழ்பெயர் ௧௨

பீமுதலேழ்பேர்முற்றும்.

பீமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௧௨.

பும்முதற்பலபெயர்ச்சூத்திரம்

பும்முதலொருபெயர்

புக்கிலென்பதுவேயகமெனப்படுமே ௧
புங்கவர்தானேதேவராகும் ௨
புஞ்சமென்பதுதிரட்சியாகும் ௩
புணியென்பதுவே*மயிர்முடியாகும் ௪
புண்ணீர்தானேசெந்நீராகும் ௫
புருண்டியென்பதுமல்லிகையாகும் ௬
புதளிதானேபுலாலெனப்படுமே ௭
புதரென்பதுவேகொக்கெனலாகும் ௮

---

* மணிமுடி என்பது பி-ம்.

புயங்கந்தானேயுரகமாகும் ௯
புரந்தரனென்பததேவேந்திரனும் ௧0
புராதனந்தானேபழமையாகும் ௧௧
புரியமென்பதுகூத்தெனப்படுமே ௧௨
புரூரமென்பதுபுருவமாகும் ௧௩
புரிசைதானேமதிலெனப்படுமே ௧௪
புருணந்தானேயிளமையாகும் ௧௫
புருவமென்பதுபுருவமாகும் ௧௬
புரோசரென்பவர்குறுநிலவேந்தர் ௧௭
புல்லரேகீழ்மக்களாகும் ௧௮
புல்லகண்டமேயொருகரும்பின்பேர் ௧௯
புல்லந்தானேயெருதெனலாகும் ௨0
புன்கென்பதுவேபுனமுருங்கைப்பேர் ௨௧
புலர்தலென்பதுகாய்தலாகும் ௨௨
புழலென்பதுவேயுட்டுளையாகும் ௨௩
புழுக்கல்தானேசோறெனலாகும் ௨௪
புளகமென்பதுகளிப்புறலாகும் ௨௫
புளிஞர்தானேவேடராகும் ௨௬
புளினமென்பதுமணற்குன்றின்பேர் ௨௭
புள்ளந்தானேகொடுவாளாகும் ௨௮
புள்ளரசென்பதுகருடனாகும் ௨௯
புறங்காடென்பதுசுடுகாடெனப்படும் ௩0
புட்கலாவர்த்தமேமேகமாகும் ௩௧
புன்னாகமென்பதுபுன்னையாகும் ௩௨
புனற்கரசன்றான்வருணனாகும் ௩௩

பும்முதலொருபேர்முற்றும்.

பும்முதலிருபெயர்

புணையேமூங்கில்தெப்பமிருபெயர் ௩௪
புதனென்பதுவேயறிவுடையோனும்
புதனுமெனவேபோற்றுமிருபேர் ௩௫
புதைதல்தானேயம்புக்கட்டும்
கைத்தளமெனவுங்கருதுமிருபேர் ௩௬
புரவலனென்பதுவள்ளலும்வேந்தனும் ௩௭
புரத்தலேயுபகாரமுங்காத்தலும் ௩௮
புலவென்பதுபுலான்முடையிருபெயரே ௩௯
புலத்தலேயூசுதலும்புலத்தலும் ௪0
புளியேபுளிதித்திப்பெனவிருபெயர் ௪௧
புளித்தருனேசெறிதலும்புளிப்பும் ௪௨
புள்ளியென்பதுநண்டும்புள்ளியும் ௪௩
புறம்பணைதானேகுறிஞ்சிநிலமு
முல்லைநிலமுமொழியுமிருபெயர் ௪௪
புனிதனேசிவன்றூயோனிருபேர் ௪௫
புகையேயோசனைதூமமிருபேர் ௪௬
புணர்வேதோயலிசைப்பெனவிருபேர் ௪௭
புதையேபுதுமையுங்கணையின்கட்டும் ௪௮
புவனமேநீர்புவியெனவிருபேர் ௪௯
புறமேமுதுகுவீரமிருபேர் ௫0
புத்தேளென்பதுதெய்வமும்புதுமையும் ௫௧
புந்தியேபுதன்அறிவெனவிருபேர் ௫௨

பும்முதலிருபேர்முற்றும்.

பும்முதன்முப்பெயர்

புள்ளேயவிட்டம்வண்டுபுண்மூப்பேர் ௫௩
புகழென்பதுவேயகத்தியும்புகழும்
வகையுமெனவேமருவுமுப்பேர் ௫௪

புட்டமென்பதுகாகமுந்தூசு
நிறைவுமெனவேநிகழ்ந்துமுப்பேர் ௫௫

புதலென்பதுவேபுருவமும்பூடு
மோர்புல்லெனவுமுரைக்குமுப்பேரே ௫௬

புலியேசார்தும்புலியுஞ்சிங்கமும் ௫௭

புள்ளுவனென்பதுகனியும்வேடனும்
வஞ்சனையெனவுமருவுமுப்பேரே ௫௮

புறவமென்பதுபுறாவுங்காடு
முல்லைநிலமுமுப்பேர்கூறும் ௫௯

புற்றென்பதுவேயெழுத்துந்தலையும்
புற்றுமெனவேபுகலுமுப்பேரே ௬௦

புகலென்பதுவேவார்த்தையுமுடம்புங்
குதிருமெனவேகூறுமுப்பேர் ௬௧

புகரேபுன்மைநிறமுங்குற்றமுஞ்
சுக்கிரனெனவுஞ்சொல்லுமுப்பேரே ௬௨

புரமேயுடலும்புரியுமுன்றுமாம் ௬௩

புத்தன்றானேயருகனும்புத்தனுஞ்
சிதரனெனவுஞ்செப்புமுப்பேரே ௬௪

புணரியேயுயர்கரையுங்கடலுங்
கடற்றிரையெனவுங்கருதுமுப்பேரே ௬௫

புன்கணென்பதுமெலிவுநோயுந்
துன்பமுமெனவேசொல்லுமுப்பேர் ௬௬

புரிவேவிரும்பலும்வேறுபடலுஞ்
சொல்லுமெனவேசெப்புமுப்பேரே ௬௭

பும்முதன்முப்பேர்முற்றும்.

பும்முதனாற்பெயர்

புங்கமேசற்றாசங்கணையு
மம்புக்குதையுமுபரமுநாற்பேர் ௬௮

புலம்பலென்பதுவேயச்சமும்புலம்பலுந்
தனியுமொலியுஞ்சாற்றுநாற்பேரே ௬௯

புறமேகுறிஞ்சிநிலமும்புறம்பு
முல்லைநிலமுந்தோ லுநாற்பெயர் எ0

பும்முதனாற்பேர்முற்றும்.

பும்முதலறுபெயர்

புரியேவிரும்ப லுஞ்சேற லும்புரமுங்
கயிறுங்கட்டுஞ்சங்குமறுபேர் எக

புரையேயுயர்வுமுவமையுங்குற்றமும்
புரையுமில்லமும்பழுதுடன றுபேர் எஉ

பும்முதலறுபேர்முற்றும்.

பும்முதலேழ்பெயர்

புல்லேபுணர்ச்சியும்புன்மையும்புதனும்
புலியும்பனையுமனுடநாளும்
புல்லுமெனவேபோற்றுமேழ்பேர் எ௩

புலவரேபாடுநருந்தேவரும்
பொருநருங்கூத்தரும்புதனும் புலவரு
மறிஞருமெனவேயாகுமேழ்பெயரே எச

புலமேயிடமுநடுக்கமுந்தனிமையுந்
திரையும்புந்தியும்விளைவுறுநிலமு
மைம்புலனெனவுமெழுபெயராகும் எரு

பும்முதலேழ்பேர்முற்றும்.

பும்முதற்பத்துப்பெயர்

புட்கரமேயாகாயமுநீரு
நிறைவும்வாளுங்குருகுந்தீர்த்தமும்
பாண்டமுகமுமிபக்கைந் நுனியும்
பங்கயஞ்சேனமெனவொருபான்பெயர் எசு

பும்முதற்பத்துப்பேர்முற்றும்.

பும்முதற்பதின்மூப்பெயர்

புண்டரீகமேமாயனும்புற்றுஞ்
சிங்காசனமுங்கவரியும்வண்டுந்

தேவேந்திரனுமோர்பூடுமோர்நோயுங்
குடையும்புலியும்வனசமுங்கழுகுந்
திக்கயத்தொன்றுமெனப்பதின்மூன்றே ௭௭

பும்முதற்பதின்மூப்பேர்முற்றும்.

பும்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௯௯.

## பூமுதற் பலபெயர்ச் சூத்திரம்

### பூமுதலொருபெயர்

பூசுரரென்பதுவேதியராகும் ௧
பூட்டைதானேசெக்கெனலாகும் ௨
பூட்சியென்பதுவேயுரிமையாகும் ௩
பூதரமேமலையாமெனப்புகல்வர் ௪
பூரியரேகீழ்மக்களாகும் ௫
பூரியென்பதுபொன்னெனலாகும் ௬
பூரிகைதானேயப்பமாகும் ௭
பூவலென்பதுசிவப்பெனலாகும் ௮
பூவம்பனென்பதுகாமன்பெயரே ௯

பூமுதலொருபேர்முற்றும்.

### பூமுதலிருபெயர்

பூழிபெயகில்சீலமுமிருபேர் ௧௦
பூசைபெயர்ச்சனையும்பூனையும் ௧௧
பூங்கற்றென்பதுபூதமுமழகும் ௧௨
பூமாந்தானேயறிகுறியுடனே
பூமரமெனவும்போற்றுமிருபேர் ௧௩
பூழியென்பதுபுழுதியுஞ்சேறும் ௧௪
பூதிமெய்யுடல்புலியெனவிருபேர் ௧௫

பூமுதலிருபேர்முற்றும்.

பூமுதன்முப்பெயர்

பூட்கைதானேயாளியும்யானேயு
மேற்கோளெனவுமேவுமுப்பெயரே கசு

பூதியேதுர்க்கந்தமும்பூமியு
நிரயமுமெனவேநிகழ்த்துமுப்பெயரே கஎ

பூகமென்பதுகூந்தற்கமுகுந்
திரளுங்கமுகுஞ்செப்புமுப்பேரே கஅ

பூருவமென்பதுமுதுமையுங்கிழக்கு
முன்புமெனவேமுப்பெயர்கூறும் கசூ

பூமுதன்முப்பேர்முற்றும்.

பூமுதனாற்பெயர்

பூவையேகாயாவுங்குயிலு
நாகணவாயுங்கிளியுநாற்பேர் உ0

பூமுதனாற்பேர்முற்றும்.

பூமுதலெழுபெயர்

பூதமேயுள்ளானுமைம்பூதமுஞ்
சீவனும்பூதமுமிறந்தகாலமு
மாலமாரும்புனிதமுமேழ்பேர் உக

பூவென்பதுவேமலரும்வனப்புங்
கூர்மையும்பொலிவுநீலமும்பூமியுந்
தாமரையெனவுஞ்சாற்றுமேழ்பேர் உஉ

பூமுதலேழ்பேர்முற்றும்.

பூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—ஙசூக.

பெம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

பெம்முதலொருபெயர்

பெண்மையென்பதுநிறையெனலாகும் க

பெண்டர்தானேயலியராகும் உ

பெட்பேமிகுதியாமெனவிசைப்பர் ங

பெட்டாரென்பதுகாதலாகும் ௪
பெருஞ்சுட்டென்பதுசிவளிகையாகும் ௫
பெருமிதந்தானேயுள்ளக்களிப்பாம் ௬
பெருகுபூணேபேரணிகலமாம் ௭
பெருங்கிழமையென்பதுமுழுதுமுரிமையாம் ௮
பெங்கென்பதுவேகள்ளிலோர்பேதம் ௯
பெருமஞ்சிகரேநாவிதராகும் ௧0
பெறுவதுகொள்வோர்கூத்தியராகும் ௧௧

பெம்முதலொருபேர்முற்றும்.

பெம்முதலிருபெயர்

பெண்ணையேபனையோராதிருபேர் ௧௨
பெட்டலேவேண்டல்விரும்பலிருபேர் ௧௩

பெம்முதலிருபேர்முற்றும்.

பெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௪0௪.

பேமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

பேமுதலொருபெயர்

பேரிகையேயோர்வாச்சியமாகும் ௧
பேடிகையேயுறையாமெனப்படுமே ௨
பேரையென்பதுநீரெனலாகும் ௩
பேழிதானேபுடவையாகும் ௪
பேழென்பதுவேபெருமையாகும் ௫
பேனந்தானேகடலுரையெனப்படும் ௬
பேடரென்பதுவேபலியாகும் ௭

பேமுதலொருபேர்முற்றும்.

பேமுதலிருபெயர்

பேயேயில்லையும்பேயுமிருபேர் ௮
பேட்பேவிருப்பும்பெருமையுமிருபெயர் ௯

பேணல்தானேமிகுத்தலும்விரும்பலும் கo

பேதியென்பதுபேதியுமிரதமும் கக

பேடேயூரும்பேடியுமிருபேர் கஉ

பேரேபெயரும்பெருமையுமிருபேர் கரு

பேமுதலிருபேர்முற்றும்.

பேமுதற் பலபெயர்ச் சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—சகள.

பைம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

பைம்முதலொருபெயர்

பைதிரந்தானேயுண்டாகும் க

பைதென்பதுவேபசுமையாகும் உ

பைத்தலென்பதுமுனிதலாகும் ௩

பைம்மைதானேபச்சையாகும் ச

பைத்தியமென்பதுநோயெனலாகும் ரு

பைஞ்ஞீலந்தான்மக்கட்பரப்பாம் சு

பைம்முதலொருபேர்முற்றும்.

பைம்முதலிருபெயர்

பைங்கூழேபயிர்நோயெனவிருபேர் எ

பையமென்பதுகூடையுங்கோரையும் அ

பைதலேபுற்கென்றலுஞ்சிறுமையும் சு

பைம்பொனென்பதுவேமேருகிரியுடன்
பசும்பொன்னெனவும்பகருமிருபேர் கo

பையுளேநோய்சிறுமையிருபேர் கக

பைத்தலேயுருத்தலும்பசுத்தலுமிருபேர் கஉ

பைம்முதலிருபேர்முற்றும்.

ஐம்முதலைம்பெயர்

பையெபழகும்பசுமையும்பையும்
பாம்பின்படமுமெத்தெனவுமைம்பேர் கரு

பைம்முதலைம்பேர்முற்றும்.

பைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்--சரு0.

பொம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

பொம்முதலொருபெயர்

பொங்குதருனேயெழுதலாகும் க
பொங்கழியேனுற்றுநெற்பொலியாம் உ
பொடித்தலென்பதுதோன்றுதலாகும் ௩
பொதிப்போதாவேபெருநாரையாகும் ச
பொதுவிருனேயம்பலமாகும் ரு
*பொதியிலென்பதுதென்மலையாகும் சு
பொதியப்பொருப்பனேபாண்டியனகும் எ
பொதுவர்தானேயிடையராகும் அ
பொருதலென்பதுமுட்டலாகும் கூ
பொப்பளமேயொருதெய்வமாகும் க0
பொழிப்பாடென்பதுபுகழெனப்படுமே கக
பொருட்செல்வியென்பதுசீதேவியாகும் கஉ
பொருநையேதண்பொருந்தமாகும் க௩
பொருநைத்துறைவனேசேரனகும் கச
பொருகளமேபகைப்புலமெனப்படுமே கரு
பொல்லமென்பதுதுன்னமாகும் கசு
பொறையனென்பதுசேரனகும் கஎ

---

* பொதியமென்பது பி-ம்.

பொன்கொல்லரென்பது தட்டாராகும் ௧௮

பொன்னியேகாவேரியாகும் ௧௯

பொம்முதலொருபேர்முற்றும்.

பொம்முதலிருபெயர்

பொலிவேபொன் னும்பொலிவுமிருபேர் ௨0

பொதுளலென்பதுசெறிதலுந்தழைத்தலும் ௨௧

பொய்த்தலேவிளையாடலும்பொய்த்தலும் ௨௨

பொதியேமூடைபொதியெனவிருபேர் ௨௩

பொத்தகமென்பதுசித்திரப்படாமுந்
திருமுறையெனவுஞ்செப்புமிருபேர் ௨௪

பொக்கமேபொய்மிகுதியிருபேர் ௨௫

பொய்யேபொத்தும்பொக்கமுமிருபேர் ௨௬

பொச்சாப்பேபொல்லாங்குமறவியும் ௨௭

பொற்றையேவரைதூறெனவிருபேர் ௨௮

பொம்முதலிருபேர்முற்றும்.

பொம்முதன்முப்பெயர்

பொங்கரென்பதுசோலையுமிலவமு
மரக்கொம்புடனேமருவுமுப்பேர் ௨௯

பொகுட்டென்பது தாமரைப்பூங்கோட்டையுஞ்
சேற்றிற்குமிழியும்வெற்புமுப்பேர் ௩0

பொம்மலென்பதுபொருமலும்பொலிவுஞ்
சோறுமென்றேசொல்லுமுப்பேர் ௩௧

பொகிலென்பதுபுட்பொதுவுங்கொப்பூழும்
பூமொட்டெனவும்போற்றுமுப்பேர் ௩௨

பொற்பென்பதுவேபொலிவுமொப்பனையும்
வனப்புமென்றேமருவுமுப்பேர் ௩௩

பொம்முதன்முப்பேர்முற்றும்,

பொம்முதனாற்பெயர்

பொழிலேபுவியும்பெருமையுஞ்சோலையு
முலகுமெனவேபோ துநாற்பேர் ௩௪

பொம்முதனாற்பேர்முற்றும்.

பொம்முதலைம்பெயர்

பொருநரேகூத்தரும்போர்த்தலைவரும்
பாணரும்வீரருங்கொற்றவருமைம்பேர் ௩௫

பொம்முதலைம்பேர்முற்றும்.

பொம்முதலேழ்பேர்

பொருளேதலைமையும்பொன்னும்பணியும்
பலபண்டமுஞ்சொற்பொருளும்பிள்ளையும்
வாய்மையுமெனவேமதிக்குமேழ்பெயர் ௩௬

பொறையென்பதுவேமலையும்பொறையுந்
துறுகலும்பூமியும்பாரமுஞ்சுமத்தலுங்
கருப்பமுமெனவேகருதுமேழ்பேர் ௩௭

பொம்முதலேழ்பேர்முற்றும்.

பொம்முதலெண்பெயர்

பொன்னேமாழையும்பஞ்சலோகமும்
வனப்புமிரும்பும்பொலிவும்வியாழமு
மிரவியும்பூமகளெனவுமெண்பேர் ௩௮

பொம்முதலெண்பேர்முற்றும்.

பொம்முதற்பன்னிருபெயர்

பொறியென்பதுவேவரியும்புள்ளியும்
பொருளும்புத்தியுமெழுத்துஞ்செல்வமு
மிருவினையுஞ்செந்திருவுமைம்புலனு
மரக்கலமுமியந்திரமுமுடனே
யிலாஞ்சனமெனவும்பன்னிருபெயராம் ௩௯

பொம்முதற்பன்னிருபேர்முற்றும்.

பொம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௪௬௩.

போமுதற் பலபெயர்ச் சூத்திரம்

போமுதலிருபெயர்

போகியேயிந்திரன்பாம்பிருபெயர் க

போக்தையேயிளம்பனையுமியானையும் உ

போசரேகாவியும்வினைக்குடையவரும் ௩

போற்றலென்பதுபுகழ்தலுமோம்பலும் ச

போலேயசையும்போலுமிருபேர் ரு

போமுதலிருபேர்முற்றும்.

போமுதன்முப்பெயர்

போதகமேயிபக்கன்றும்பனையு
மிளமையுமெனவேயிசைக்குமுப்பேர் சு

போரென்பதுவேசதயமும்பொருதலு
நெற்போரெனவுமுப்பேர்கூறும் எ

போர்வையென்பதுதோலு*முட்டாக்கு
மீக்கோளெனவுமேவுமுப்பேர் அ

போமுதன்முப்பேர்முற்றும்.

போமுதனாற்பெயர்

போதமென்பதுவேயறிவுஞானமு
மாக்கலமுமிபக்கன்றுநாற்பேர் கூ

போமுதனாற்பேர்முற்றும்.

போமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—சஎஅ.

பௌமுதற் பலபெயர்ச் சூத்திரம்

பௌமுதலொருபெயர்

பௌத்தனென்பதுபுத்தன்பெயராம் க

பௌமுதலொருபேர்முற்றும்.

* மூடாக்கு என்பது பி-ம்.

பௌமுதன்முப்பெயர்

பௌவமென்பதுவேயுவருங்கடலுங்
*கண்ணுமெனவேகருதுமுப்பேர் உ

பௌமுதன்முப்பேர்முற்றும்.

பௌமுதற் பலபெயர்ச் சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—சஅ0.

திருமேற்றளிக்குச்செழுந்தமிழ்ப்புராணந்
தெரிதருசிதம்பரரேவணன்பகர்ந்த
வேழெனும்பகராதிப்பெயர்த்தொகுதி
தாழ்வாநானூற்றெண்பத்தைந்தே

ஏழாவதுபகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

எட்டாவது

## மகராதிப்பெயர்த்தொகுதி.

விசுவமித்திரன்றனிவேதியனுக்குந்
திசைபுகழ்பட்டீச்சுரனருள்வணங்கி
மகராதிப்பெயர்த்தொகுதியைவகுப்பாம்.

மம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

யம்முதலொருபெயர்

மகபதியென்பதுதேவேந்திரன்பெயர் க
மகமுறையென்பதுவிருந்தெனலாகும் உ
மகரகேதனனேகாமனெனப்படும் ௩
மக்களென்பதுமானிடர்பெயரே ச
மனுநறுனேபொலிவெனலாகும் ௫
மகாரென்பதுவேபிள்ளைகளாகும் சு
மஞ்சுவென்பதுவேகட்டிலாகும் எ

* கணுவமென்பது பிசும்.

மஞ்சந்தானேகட்டிலெனப்படும் அ
மஞ்சிகையென்பதுபேழையெனப்படும் கூ
மடிந்தாரென்பதுபட்டாரெனலாம் க0
மடுத்தருனேயுபகாரப்பெயர் கக
மணங்கலென்பதுபானையாகும் கஉ
மண்டூகந்தான்றவளையாகும் கஙூ
மண்ணீடென்பதுதிண்ணையாகும் கச
மண்ணலேபொற்புறுத்தலாகும் கரு
மழுவருனேயலங்கரித்திடலாம் கசூ
மஞ்சுகமென்பது கொக்கின்பேரே கஎ
மதகுதானேநீரோடியின்பேர் கஅ
மதர்ப்பென்பதுவேயுள்ளக்களிப்பாம் ககூ
மத்தந்தானேசேலெனலாகும் உ0
மதங்கரென்பதுபாணராகும் உக
மலயந்தானேபொதியமாகும் உஉ
மதகயந்தானேயானையாகும் உங
மதாணியென்பதுபேரணிகலமே உச
மத்திகைதானேசம்மட்டியின்பேர் உரு
மந்தியேபெண்குரங்கெனலாகும் உசூ
மந்தாகினியேகங்கையாகும் உஎ
மயூரமென்பதுமயிலெனப்படுமே உஅ
மருமந்தானேமார்பெனலாகும் உகூ
மருத்தென்பதுவேகாற்றெனலாகும் ங0
மஞ்சிலென்பதுமுதுவரம்பாகும் *ஙக
மலாவகந்தானேபிண்ணாக்காகும் ஙஉ
மலரோனென்பதுபிரமனாகும் ஙங

---

* சாலெனலாகும் என்பது பி-ம்.

மலினந்தானேமாசெனலாகும் ௩௪

மலயக்காலேதென்றலாகும் ௩௫

மலைப்பென்பதுவேபோர்கூத்தாகும் ௩௬

மத்தியந்தானேநடுவெனலாகும் ௩௭

மல்லமென்பது தட்டெனலாகும் ௩௮

மழவுதானேயிளமையாகும் ௩௯

மற்கடமென்பதுகுரங்கெனலாகும் ௪௦

மற்கோளானேபகையெனலாகும் ௪௧

மற்கென்பதுவேமுனிவெனலாகும் ௪௨

மன்பதையென்பதுமக்கட்பரப்பாம் ௪௩

மன்மதன்றானேகாமனாகும் ௪௪

மருவலரென்பது சத்துருக்களாம் ௪௫

மறைபுகலென்பது சரண்புகலாகும் ௪௬

மம்முதலொருபேர்முற்றும்.

மம்முதலிருபெயர்

மச்சமேமீன்மச்சமிருபேர் ௪௭

மகரந்தமேபூந்தேனுங்கள்ளும் ௪௮

மட்டேமெல்லையுங்கள்ளுமிருபேர் ௪௯

மண்கணைதானேகுடமுழாவுடனே
முழவமெனவேயிருபெயர்சாற்றும் ௫௦

மண்ணாடிலையே ஸ்ரீகாமமுஞ்
சந்திரமெனவுஞ்சாற்றுமிருபேர் ௫௧

மதுகரமென்பதுகள்ளும்வண்டும் ௫௨

மந்தாரமென்பதுசெம்பரத்தமுந்
தருமரமெனவுஞ்சாற்றுமிருபேர் ௫௩

மயனேதேவதச்சனும்வினைஞரும் ௫௪

மயிலையேயிருவாட்சியுமீனும் ௫௫

மராமரமேயாச்சாவுங்கடம்பும் ௫௬

மாளமேமாதளையுமுரசமும் ௫எ
மருமானென்பதுமருகனுமகனும் ௫அ
மறுகேதெருவுமறுகுமிருபேர் ௫௯
மன்றலென்பதுவேகல்யாணமும்
பரிமளமெனவும்பகருமிருபேர் ௬0
மருவேமணமுமருவுமிருபேர் ௬௧
மகமேயாகமோர்நாளிருபேர் ௬௨
மடலென்பதுபனையேடுபோல்பவு
மலரிதழெனவுமருவுமிருபேர் ௬௩
மழையேமேகங்குளிர்ச்சியிருபேர் ௬௪
மடையேமணிப்பணிக்கடைப்பூட்டுடனுஞ்
சோறுமென்றேசொல்லுமிருபேர் ௬௫
மத்தகமென்பதுநெற்றியுஞ்சென்னியும் ௬௬
மதனேகாமனும்வனப்புமிருபேர் ௬எ
மரபேமுறைமையுந்தொன்மையுமிருபேர் ௬அ
மறலேபிணக்கும்*கூத்துமிருபேர் ௬௯
மன்னனென்பதுவேயுத்திரட்டாதியு
மன்னனுமெனவேமருவுமிருபேர் எ0
மல்லலேவளம்வலியெனவிருபேர் எ௧
மற்றேவினைமாற்றசைநிலையிருபேர் எ௨
மறலியேமயக்கங்கூற்றெனவிருபேர் எ௩

மம்முதலிருபேர்முற்றும்.

மம்முதன்முப்பெயர்

மங்குலென்பதுவேமேகமுமிருளும்
விண்ணுமெனவேவிரிக்குமுப்பேரே எ௪
மஞ்சரியேபூங்கொத்துந்தளிரு
மாலையுமெனவேமதிக்குமுப்பேர் எ௫

---

* கூற்றும் என்பது பி-ம்.

மட்மேயறியாமையுமுனிவாசமுஞ்
சத்திரமெனவுஞ்சாற்றுமுப்பேர் எசு

மயிர்வினையென்பதுமயிர்குறைகருவியு
நாவிதனுங்கத்திரிகையுமுப்பேர் எஎ

மருந்தென்பதுவேயமுதமுமருந்தும்
புதற்புல்லெனவும்போற்றுமுப்பேரே எஅ

மதுவென்பதுவேவசந்தகால்முந்
தேனுங்கள்ளுஞ்செப்புமுப்பேர் எகூ

மல்லென்பதுவோர்கூத்தின்வகுப்பும்
வளமும்வலியுஞ்செப்புமுப்பேர் அ0

மலர்தல்தானேயெதிர்தலுந்தோன்றலு
மலர்தலுமெனவேமருவுமுப்பெயரே அக

மன்றமென்பதுவேவெளியும்வாசமு
மம்பலமெனவுமாகுமுப்பேரே அஉ

மண்டிலமென்பதுநாடுங்குதிரையும்
வட்டமுமெனவேவைக்குமுப்பேர் அங

மயலென்பதுவேமயக்கமுஞ்செத்தையும்
பேயுமெனவேபேசுமுப்பேர் அச

மண்ணைதானேயிளமையும்பேயு
மறிவிலாருமாகுமுப்பெயரே அரு

மருளேமயலுங்குறிஞ்சியாழ்த்திறனும்
பேயுமெனவேபேசுமுப்பெயரே அசா

மாக்காலேயாயிலியநாளுஞ்
சோதிநாளுமாக்காலுமுப்பேர் அஎ

மலைத்தலென்பதுமறுத்தலும்பொருதலுஞ்
சூடலுமெனவேசொல்லுமுப்பேர் அஅ

மள்ளர்தானேயுழவருங்குறவரும்
வீரருமெனவேவிதிக்குமுப்பேரே அகூ

மருதமேமருதநிலத்திற்பாடலு
மருதநிலமும்வயலுமுப்பேர் கூ0

மரையேயோர்மிருகமுந்தாமரையுந்
தவளையுமெனவேசாற்றுமுப்பேர் கூக

மதமேயவாவர்சொல்லிடுமதமுஞ்
செருக்குமதமுஞ்செப்புமுப்பேர் கூஉ

மந்திரியேசுக்கிரனுங்குபேரனு
மந்திரியெனவும்வகுக்குமுப்பேரே கூரு

மம்முதன்முப்பேர்முற்றும்.

மம்முதனாற்பெயர்

மகரமேயோரிராசியுங்காதலுஞ்
சுறவும்பூந்தாதுஞ்சொல்லுநாற்பெயர் கூச

மறையேகேடகமந்திரம்வேத
மிராசியமெனவேயிசைக்குநாற்பேர் கூரு

மதுகமென்பதுவேயெட்டியுமிலுப்பையு
மதுரமுந்தராவும்வைக்குநாற்பேர் கூசா

மன்னேவேந்தனுமசைச்சொலுமிகுதியு
நிலையுமெனவேநிகழ்த்துநாற்பேர் கூஎ

மதியேநிலவுமுன்னிலையசைச்சொலு
மாதமும்பேறிவுடனுநாற்பேர் கூஅ

மண்டலிதானேயுரகமும்பூமியு
நாயும்பூனையுநாற்பேராகும் கூகூ

மதர்வேவலியுமிகுதியும்வனப்பு
மிடமுமெனவேயிசைக்குநாற்பேர் க00

மம்முதனாற்பேர்முற்றும்.

மம்முதலைம்பெயர்

மந்திரமேபரிக்கூட்டமும்விசாரமுங்
கோயிலுமில்லுமந்திரமுமைம்பேர் க0க

மணவேமாடையுநீலமணியு
நன்மணியுடனேயக்குமணியுஞ்
சங்குமெனவேசாற்றுமைம்பேர் க0உ

மம்முதலைம்பேர்முற்றும்,

மம்முதலறுபெயர்

மணியென்பதுவேமுத்தும்வனப்புங்
கருமையுநன்மையுங்கடவுண்மணியு
நவமணியெனவுநாட்டுமறுபெயர் ௧0௩

மண்ணேயணுவுமுழவின்மார்ச்சனையு
மொப்பனையுங்கழுவுதலுமாட்சிமையும்
பூமியுமெனவேபோற்றுமறுபேர் ௧0௪

மறமென்பதுவேமலைந்தசேவகமுஞ்
சினமும்பிணக்குங்கூற்றுங்கொலையும்
வினைசெயலெனவுமேவுமறுபேர் ௧0௫

மம்முதலறுபேர்முற்றும்.

மம்முதலெழுபெயர்

மஞ்சென்பதுவேயானையின்முதுகும்
பூணும்வலியும்வனப்புமழையு
மிளமையுமுகடுமேழ்பெயராகும் ௧0௬

மதலைதானேகொன்றையும்பிள்ளையும்
வங்கமுங்கொடுங்கையும்பாவையுந்தூணு
மரக்கலமெனவுமருவுமேழ்பேரே ௧0௭

மடியெனலேயடங்குதலுந்தாழையுஞ்
சோம்பும்வயிறுந்துசுநோயுஞ்
சோறுமெனவேசொல்லுமேழ்பேர் ௧0௮

மடங்கலேயுருமிடியுந்தாழையு
மூழித்தீயுஞ்சிங்கமுநோயு
மடங்கலுங்கூற்றமருவுமேழ்பேரே ௧0௯

மம்முதலேழ்பேர்முற்றும்.

மம்முதற் பலபெயர்ச் சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௧0௯.

மாமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

மாமுதலொருபெயர்

மாசென்பதுவேகளங்கமாகும் ௧
மாசுணமென்பதுபெரும்பாம்பாகும் ௨

# சூளாமணிகாவியம்.

(தோலாமொழித்தேவர் இயற்றியருளியது.)

இது சிறு பஞ்சகாவியங்களி லொன்று. இக்காவியம் சொற்பொலிவு, பொருள்நயம், நடையழகு, கற்பனையலங்காரம் முதலியவற்றால் சிறந்துவிளங்கும் 2131 செய்யுட்களைக் கொண்டது. இதில் நாட்டுச் சருக்கம், நகரச்சருக்கம், குமாரகாலச்சருக்கம், இரதநூபுரச்சருக்கம், மந்திரசாலைச்சருக்கம், தூதுவிடுசருக்கம், சீயவதைச்சருக்கம், துறவுச் சருக்கம், முத்திச்சருக்கம் முதலிய பன்னிரண்டுசருக்கங்க ளுள்ளன. இந்நூல் மஹாகாவியமென்னும் சீவகசிந்தாமணிக்கும் முந்தினதாகக் கொள்ளப்படுகின்றது. அன்றியும் "கம்பருடைய விருத்தங்களின் ஓசைத்திறமும் சூளாமணிவிருத்தங்களின் ஓசைத்திறத்தை ஒத்திருப்பது உய்த்துணர்வார்க்குப் புலப்படும். கம்பர் சூளாமணியில் நன்கு பயின்றிருக்கக்கூடும்" என்று ஸ்ரீமத்-T. M. செல்வகேசவராய முதலியார் M. A., அவர்கள் தமது கம்பநாடர் என்னும் புத்தகத்தில் எழுதியுள்ளார். இந்நூலிலுள்ள செய்யுட்கள் பண்டை உரையாசிரியர்களால் உதாரணச் செய்யுட்களாக எடுத்தாளப்பட்டுள்ளன. செந்தமிழ் பயில்வோர்க்கு இந்நூல் மிக்க பயன் தாத்தக்கது. சொற்பப் பிரதிகளே கைவசமிருக்கிறபடியால் முந்தி எழுதுகிறவர்களுக்குத்தான் புத்தகம் கிடைக்கும்.

இதன் விலை ரூ. 2—8—0